# வள்ளுவரும் — மார்க்சும்



க. திருமாறன்

மலர்விழிப் பதிப்பகம்
3, தெற்குப் பெருமாள் மேத்திரி வீதி,
மதுரை.

வெல்க தமிழ்

# முன்னுரை

குமரி முனையில் குளித்து நிமிர்ந்து பார்த்தால் மூன்று கடல்கள் கூடுவது தெரியுமென்று நண்பர்கள் கூறினார்கள். உண்மையில் மூன்று கடல்களையே காணமுடியாது. ஒரே கடலாகத் தான் தெரியும். அதுபோலவே அறிவுக்கடலான வள்ளுவரையும்-மார்க்சையும் இணைத்துக் காண எண்ணினேன். என் சிறுமைதான் கடலின் முன்னே புலப்பட்டது.

குமரியில் கையளவு நீர் எடுத்து "இது முக்கடல் நீர்" என்று கூறினால் அதில் நமக்கு என்ன தெரியும். அறிவுக்கடல்களான இருவர் தம் கருத்தில் ஒரு கையளவு முகந்தேன்.

கையில் அள்ளிய கடல் நீரைக் கடுகளவு உண்டு மன நிறைவு அடைவோரும் உண்டு, அறிவுக் கடலிலே முகந்துதந்துள்ள இந்த கடுகளவைஉட்கொண்டு,கைப்பு காணின் இதைக் கடலின் குறை எனக் கொள்ளாது புகுந்தகையின் பிழையென உட்கொண்டு ஊக்குவிக்க வேண்டுகிறேன். தங்கள் கருத்தை எழுதியனுப்புவோர்களுக்கு என் முழு நன்றி உரியதாகும். என் முதல் முயற்சியை ஊக்கிய மலர்விழி பதிப்பகத்தார்க்கு என் உளங்கனிந்த நன்றி. மலர்விழிப் பதிப்பகத்தாரின் முதல் முயற்சி இது, உங்கள் துணை தேவை. குறுகிய கால எல்லையில் விரைவுடன் பதிப்பித்து வெளியிட உதவிய விஜயா பிரிண்டர்ஸ் உரிமையாளர்கட்கு என் நன்றியும் பதிப்பகத்தாரின் நன்றியும் என்றும் உரித்து.

அன்பன்

**க. திருமாறன்**

எங்கள் அடுத்த
வெளியீடுகள் :

1. இலக்கியமும்
வாழ்க்கையும்
2. தமிழகம் தனித்து
வாழ முடியாதா?
3. வள்ளுவரும்
கௌடில்யரும்

# வள்ளுவரும் மார்க்சும்.

## 1. இன்பமும் துன்பமும்.

"அமைதி"! ——— (ஓர் குரல்)
"நிலவுக"! ——— (முழக்கம்)

"பொதுவுடைமைப் பூங்கா"! —— (ஓர்குரல்)
"வளர்க" ——— (முழக்கம்)

"மார்க்சு கண்ட மறை"! ——— (ஓர் குரல்)
"ஓங்குக" ——— (முழக்கம்)

"லெனின் கண்ட பகை"! ——— (ஓர் குரல்)
"ஒழிக" ——— (முழக்கம்)

"மா வீரன் ஸ்டாலின்"! ——— (ஓர் குரல்)
"வாழ்க"! ——— (முழக்கம்)

என்ற மக்களின் பேரொலி வானைக் கிழிக்கிறது. வெள்ளம் போல் மக்கள் கூட்டம் அலை அலையாக அணி வகுத்து வருகிறது. உணர்ச்சியின் உருவாய் வீர நடை போடும் அவர்கள் படை வீரர்களல்லர். கிழிந்த ஆடை, பரந்த தலை, பசித்து களைத்த தோற்றம். இருந்தும் அவர்கள் வீர நடை போடுகிறார்கள். அவர்களின் இடிந்த வீடுகள் இன்னமும் செப்பனிடப்படவில்லை. கணவன் ஓரிடம், மனைவி ஓரிடம். தாய், தனையன் எங்கு வாழ்கிறான் என்றே அறியாத சூழ்நிலை. நேற்று இன்னல் மடுவிலிருந்தனர். ஆனால், இன்று தாம் அடைந்த இன்னலை மறந்து பொங்கும் மகிழ்வோடு, புரட்சிப் பொன்னுரைகளோடு வெளிவருகின்றனர். கை முறிந்த கிழவனும்,

கண்ணிழந்த கன்னியும், கைக்குழந்தையைப் பலி கொடுத்த தாயும்கூட தம் துன்பம் மறந்து மகிழ்கிருர்கள். இழந்த பொருள்கள் என்ன எளியவையா? உடன் திரும்பப் பெறக்கூடியவையா? இருப்பினும் மகிழ்கிருர்கள் வெற்றி விழாவில்.

தன் தாய் நாட்டைப் பாசிச வலையில் பிணித்து அடிமையாக்க வந்தான் இட்லர் என்னும் கொடியவன். அவன் வெறி தணிய, பல்லுயிரை இல்லந்தோறும் பலி யாகத் தந்தனர். வெறியனை வீழ்த்திஞர்கள். நாட்டின் விடுதலை காப்பாற்றப்பட்டது. ஆஞல், தாம் இழந்தவை மீளுமா? மகனை இழந்த தாய் மகிழமுடியுமா? மீளாத் துயரத்தில் அமிழவேண்டும். ஆஞல் அவர்கள் மனம் மகிழ்கிறது நாட்டின் வெற்றியிலே. மகன் இழந்த துயரையும் மறைத்துவிடுகிறது மாபெறும் வெற்றி.

வல்லரசுகளும் அஞ்சும் செஞ்சொல் வீரன். நாட்டின் விடுதலை பெற நாளும் போராடி வெற்றி கண்டோன். குடியாட்சியின் முதலமைச்சன். இணையிலா அறிஞன். மாலை வேளையில் உலாவச் செல்கிருன். குழந்தைகள் விளையாடுகின்றன. அதன் நடுவில் அவனும் குழந்தையாகிருன்! ஆட்டத்தில் தோல்வி பெறுகிருன். அதற்குத் தண்டனையாக மண்டியிட்டு அவர்களைச் சுமக்கிருன். வல்லரசுகளுக்கும் வணங்காத மாவீரன் விளையாட்டுக் குழந்தையிடம் வணங்குவதில் இன்பம் பெறுகிருன். சிறையிலும் சித்திரவதையிலும் மண்டியிடா மாவீரன் சிறுவர்களிடம் மண்டியிட்டு மகிழ்கிருன். ஏன்? இவைகள் தோல்வி இல்லையா? ஆம். தோல்விதான். ஆஞல் அவனுக்கு அதிலே மகிழ்வு பிறக்கிறது.

'மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை' 'எமை மாட்ட நினைக்கும் சிறைச்சாலை' என்று இளைஞர் இன்னிசை பாடினர். காவலர் சிலர் வந்தனர். சிறையிட்டனர். அந்த இளங் காளைகளின் முகத்தில்புன்னகை பொலிவு முகிழ்த்தது. "வீழ்க இந்தி! வாழ்க தமிழ்!" என்றனர். உடல் சிறைப்பட்டாலும் உள்ளம் கொள்கையை நினைத்து

மகிழ்ந்தது. களம் புகுந்த காளைகளுக்கு விம்மல் தரவில்லை விலங்கு — களிப்பையே தந்தது. பக்கத்தில் நின்றவர்கள் பார்த்தவர்கள் வருந்தினர். ஆனால், சிறைக்கு விலங்கு பூட்டி இழுத்துச் செல்லப்படும் அவர்களோ "நமக்கல்லவா இந்தப்பேறு" என்று மகிழ்ந்து காப்பணி விழா நடந்ததுபோல புன்னகை பூத்தனர். அன்றலர்ந்த செந்தாமரையை வென்றது அவர்கள் திருமுகப் பொலிவு. இப்படி ஒரு மகிழ்ச்சி.

வெற்றியைக் கொண்டாடுவது முதல் நிகழ்ச்சி. புதிதாகப் பெற்றது ஒன்றுமில்லை. இழந்தவையோ மிகப்பல— ஆனால் மகிழ்கிறார்கள். இழப்பு மகிழ்ச்சி தருமா? தருகிறது அவர்களுக்கு.

பெற்றதோ தோல்வி — பெற்றவனோ மாவீரன் — மகிழ்ச்சி பிறக்க முடியுமா? ஆனால் அவன் மகிழ்கிறான் தோல்வியில்.

சிறை — கள்ளர் குகை — கொடுமையின் உறைவிடம் — செல்லவிரும்புகிறார்கள் இளைஞர்கள். இப்படியும் ஒரு மகிழ்ச்சி.

இழப்பு, தோல்வி, சிறை இவை மனத்தை வாட்டுவன – அவலந்தருவன – ஆனால், இங்கோ மகிழ்ச்சியைத் தருகின்றது சிலருக்கு. வேம்பு கசப்பது இயல்பு. இங்கே இவர்களுக்கு இனிக்கிறது, நேர்மாறுகப் பிறிதொன்று. அங்கே கரும்பு கசக்கிறது.

அண்மையிலே தமிழகப் பெரியார் ஒருவர் சிறையினின்று வெளிவந்தார். அவரின் உற்றாரும் உறவினரும் வந்து சிறைப்பட நேர்ந்தமைக்கு வருந்தி, வெளிவந்தமைக்கு மகிழ்ச்சி தெரிவித்தனர். அந்தக் கொள்கைக் கோமகன் தன் தொண்டிற்குப் பரிசு சிறையல்ல, அதை விடச் சிறந்த கொடுமை வரினும் எதிர்நோக்கியவர். அவர் எதிர்பார்த்ததுதான் சிறை. ஆனால் அவர் எதிர்பாராத விதம் சிறை சென்று வந்தபின் துக்கம் விசாரிக்க ஒரு கூட்டத்தார் வந்தனர். அவர்கள் கொள்கைக்குத் துணையாக அல்ல, குற்றவாளியைக்

கண்டு அவனுக்கு ஆறுதல் கூறுவது போல், அவரை விசாரிக்க வந்தார்கள். இப்படிக் கொள்கைக்குத் துணையில்லாமல்-தன்னை விசாரிக்க ஒரு கூட்டம் வருமென்று எதிர்பார்க்கவேயில்லை. ஆகவே, அவரைச் சிறை எப்படி இருந்தது என்று கேட்டபோது, "சிறை அப்படி ஒன்றும் பெருங் கொடுமையாக இல்லை. ஆனால், சிறையிலிருந்து வந்தபின் துக்கம் தீர்க்க வருகிறார்களே, அப்படிப்பட்டவர்களைப் பார்ப்பதுதான் சிறையைவிடச் சித்திரவதையாக இருக்கிறது'' என்றார்.

இந்த நிகழ்ச்சி, எதிர்பார்க்கும் சிறையைவிட எதிர்பாராதஉபசரிப்பு தொல்லையாகவேபடுகிறது தொண்டருக்கு. தன் பொருளை இழந்தோமே என்றும், தோல்வி பெற்றோமே என்றும், சிறைப்பட்டோமே என்றும் வருந்த வேண்டியவர்கள் வருந்தவில்லை. பொதுநல உள்ளத்தால் மகிழ்கிறார்கள். ஆனால் வரவேற்புகளுக்கு மகிழ வேண்டிய தலைவர் வருந்துகிறார். இதற்குக் காரணம் எது? மனநிலை. வேண்டியவர் அளித்தால் வேம்பும் இனிக்கிறது- வேண்டாதவர் கொடுத்தால் கரும்பும் கசக்கிறது. வெற்றி விழா கொண்டாடும் ருசியர்கள் பட்டது துன்பம், வல்லரசுகளுக்கும் வணங்காத தலைவன் அடைந்ததுதோல்வி. அயல் மொழியை எதிர்த்துத் தன் தாய்மொழி காக்க வீரர்கள் சென்றது சிறை.

துன்பம், தோல்வி, சிறை இவைகளால் யாராவது இன்பம் பெறமுடியுமா? ஆனால், அவர்கள் மனம் இன்பம் அடைகிறது. அதைப்போலவே சிறை சென்று வந்தவருக்கு நல்ல பாராட்டு. ஆனால்,அவர் மனதுக்குத்தொல்லையாகப் படுகிறது அது. பாராட்டு யாரையாவது துன்பப் படுத்துமா? மனநிலைதான் இந்த மாறுபாட்டிற்குக் காரணம். ஆதலின் தோல்வியோ வெற்றியோ, இன்பமோ துன்பமோ எதுவும் மனநிலையைப் பொறுத்தே அமைகின்றன. சிறைக்குள் இருந்தாலும் மனதை ஒடுக்கி அடக்க முடிந்தால், அதுவே மாங்குயில் கூவிடும் பூஞ் சோலையாகும். அதற்கு மாறாக மனத்தைப் பண்படுத்த முடியாதவர்கள் பெரிதும் அல்லல் படுகிறார்கள். எனவே

மனநிலைதான் இன்ப துன்பங்களுக்குக் காரணம் என்பர்.

வாழ்வின் சில வேளைகளில்தான் நெஞ்சம் துன்பம்–தோல்வி – இவைகளை எளிதில் தாங்கி இன்பமடைய முடியும். வாழ்வின் பல்வேறு திருப்பங்களையும் – இடர் எது வந்தாலும் தாங்கும் உரம் பொதுவில் நெஞ்சத்திற்கு இயலாததாகும்.

> "வெள்ளத்தனைய இடும்பை: அறிவுடையான்
> உள்ளத்தின் உள்ளக் கெடும்.

அறிஞர்கள் நினைத்த அளவிலேயே வெள்ளம் போல் பெருகிய துன்பம் உடனே மறைந்துவிடும்.

பொதுவில் பலரும் சுற்றுப்புறத்திற்குத்தான் அடிமையாவர். சூழ்நிலைக்கு அடிமையாகாது மனசாட்சிக்கேற்றவாறு நம்பி நடப்பவர்கள்தான் புத்தர் போன்ற பெரியவர்கள். ஆனால்,எல்லோரும் எளிதில் புத்தராகிவிட முடியுமா? முடியாதென்றாலும் பற்றுகளிலிருந்து நீங்க, இன்ப துன்பங்களில் அமிழ்ந்துவிடாதிருக்க வழிதேடினர்கள் பலர். வாழ்வின் இன்ப துன்பங்கள் மனத்தைப் பொறுத்து அமைகின்றன. உலகை ஆராயத் தொடங்கிய பழைய சைன தீர்த்தங்கர்கள் முதல் பலரும் இந்த உண்மையைக் கூறியுள்ளனர். இந்த உண்மையைத் தெளிவாக உணர்ந்த வள்ளுவர் "மன நலம் மன்னுயிர்க்கு ஆக்கம்" என்கிறார். துன்பமும்,அறிவுடையார் உள்ளத்தே நினைத்த அளவில் கெடும். மனத்திண்மை உடையவரிடம் துன்பந்தான் துன்பப்படும் என்றும் கூறியுள்ளார்.

## வாழும் வழியும் வழுக்கு வழியும்

இன்ப துன்பங்கள் பற்றின் காரணமாக எழுகின்றன. ஆசை அற்றுவிட்டால் துன்பமோ, இன்பமோ தொடராது. ஆகவே, பற்றினை நீக்கிக்கொள்ள பலர் பல வழி கண்டனர். நீந்த வேண்டும் என்ற ஆசை சிறுவனுக்கு; நண்பன் நீரில் குதித்தால்தான் நீந்த முடியுமென்றான். நிலைக்க முடியாத நீரில் குதித்து நீந்தவும் சொன்னான்.

வீழ்ந்து மூழ்கி மூச்சுத் திணறி யாரோ கரையேற்ற கரையேறி வெளிவந்த சிறுவன் "தன்னை ஏன் இவ்வாறு நிலைக்காத இடத்தில் குதிக்கச் சொன்னாய்" என்றான். நண்பன், நிலைக்கும் நீரானால் கால் தட்டும். கால் தட்டினால் நின்றுவிடுவாய். உன் ஆசை நிறைவேறாது. ஆகவே நிலைக்காத நீரைக் காட்டினேன் என்றான். நான் மூழ்கிச் செத்திருந்தால் என்ன ஆகும் என்றான் இளைஞன். பின் உனக்கு நீச்சல் பயன்படாது என்றானும் ஒரு எத்தன். அதுபோல, பற்றினை நீக்கிக்கொள்ள பலர் வழி காட்டினர், பற்று எப்படி வருகிறது. நீ இருப்பதால்தானே. நீ ஏன் இருக்கிறாய் — இந்த உலகம் நம்புவதால்தானே என்ற முறையிலே ஆராய்ச்சியில் ஈடுபட்டு — எல்லாம் மாயை இன்ப துன்பங்கள் வாழ்வதால்தானே வருகிறது. இனி துன்பங்கள் வேண்டாமென்றால் — உலகைத்துற, என்றனர். ஆனால் அதே நாழிகையில் மேல் உலகம்போ. அங்கே என்றும் இன்பம். வைகுந்தம், கைலாசம் என்றனர். பற்றினை இங்கே நீக்கிக்கொள். வாழ்வினையே வெறு என்று பேசி, உலகே மாயம், வாழ்வே பொய், காயம் ஓர் காற்றடைந்த பை, என்றெல்லாம் வாழாமைக்கு வழி சொன்னார்கள். மண், பெண், பொன் இவைகளில் பற்று அறவே அறவேண்டும் என்றனர். மனிதன் பற்றினால் கெடுகிறான். ஆகவே அவன் இந்த உலகில் வாழ்வதால் பயனில்லை என்றே சமயங்கள் பலவும் முடிவுக்கு வந்தன. பிறந்ததின் பயன் மேல் உலகம் (மோட்சம்) அடைதலே என்று நூல்களும் கூறின. இந்தச் சமய வெள்ளத்தில் மூழ்கிய தமிழ் நூல்கள் சில கரையேற முடியாமல் மேல் உலகைக் காட்டும் கைகாட்டிகளாகவே நிற்கின்றன. வள்ளுவர் குறள் மட்டுமே பற்றினை அடக்கி அதற்கு அடிமைப்படாது மனிதன் வாழவேண்டும் என்ற கருத்தைத் தெளிவாக்கியது. மனிதன் இவ்வுலகில் நன்கு வாழவேண்டும் என்று கருதியவர்கள் வள்ளுவரும் மார்க்சும் ஆவர்.

## இரு நோக்கு.

இந்த உலகில் நல்வாழ்வு வாழவேண்டும். அதற்கு வழிஎன்ன என்று எண்ணியவர்கள் தான் வாழும்வழியைத்

தெளிவாகக் கண்டார்கள். அவர்களால் மனிதனுக்கும் பொருள்களுக்கும் உள்ள தொடர்பைத் தெளிவாகக்காண முடிந்தது.

உள்ளதை உள்ளபடி காண முற்பட்ட அவர்களிட மும் சில கருத்து வேறுபாடுகள் உண்டு. சிலர் நம் மன நிலையே நம் கருத்தை உருவாக்குகின்றன என்றனர்.

கல்லிலே செய்த நாயின் சிலையைப் பார்க்கின்ற ஒரு வனை "அது என்ன என்று கேட்டால் என்ன பதில் சொல்வான்?". நாய் என்றுதான் பதில் சொல்வான். கல் என்று சொல்வதில்லை. காரணம் அவன் மனம் அதைக் கல்லாகக் கருதாமல் நாயாகக் கருதிப் பார்க்கிறது. இதைத் தான் "மனநிலையே கருத்தை உருவாக்குகிறது", என்று கூறினர்.

வேறு சிலர் நாம் காணுகிற பொருள்களே நம் மன நிலையை உருவாக்கிறது என்றனர்.

"மணிமேகலை மலர்விழி இவர்களில் யார் உயரம்" என்றால், "மலர்விழி உயரமானவள்" என்று பதில் கிடைக் கிறது. நமக்கு இந்த இருவரையும் தெரியாது. நம்மால் முடிவு சொல்லவும் முடியவில்லை. மலர்விழியையும் மணி மேகலையையும் பார்த்தவர்கள் தெளிவாக மலர்விழிதான் உயரம் என்று கூறுகிறார்கள். அவர்கள் எப்படி அந்த முடிவுக்கு வந்தார்கள். அந்த இருவரையும் (இரு பொருளையும்) பார்த்ததால்தான் அவர்கள் அந்த முடி வுக்கு வரமுடிந்தது. நாமும் பார்த்தால் அந்த முடிவுக்கு வருவோம். எனவே நம் மனதில் தோன்றுகிற முடிவுக ளுக்குச் சூழ்நிலையில் இருக்கிற பொருள்கள்தான் கார ணம் என்பர் ஒரு சிலர். இதைப் "பொருள் முதல் நோக்கு" என்பர்.

வேறு சிலர் மனநிலை, சூழ்நிலை ஆகிய இரண்டுமே பொருள்களைப் பற்றிய கருத்தை நமக்குத் தருகின்றன என்று கூறினார்கள்.

# 2. பொருள் முதல் நோக்கு

இன்பமும் துன்பமும் மனநிலையால் வருவதல்ல. மனநிலையே சூழ்நிலையால்தான் உருவாகுகிறது என்பவர் மார்க்சு.

சூழ்நிலை, இடம், பொருள், செயல், காலம் இவைகளுக்கேற்ப மாறிக்கொண்டே உள்ளது. மனிதன் தடை செய்துகொள்ள முடியாதவையாக இன்றும் உள்ள துன்பங்கள் முதுமை, இறப்பு முதலியவையே. மற்ற துன்பங்களான, வறுமை, பஞ்சம், பிணி இவைகள் மனிதனே படைத்தவை. இவைகள் நிலவுவதற்குக் காரணம், தனியுடைமை, பணச்செல்வாக்கு; முதலாளிஆட்சி முதலியன. இக்கேட்டினைத் தடுத்து சூழ்நிலையைத் தூயதாக்க ஒப்புரிமையும், பொதுஉடைமையும் மலரவேண்டும் என்பர் மார்க்சு.

மக்கள் வாழ்வு மனநிலையைப்பொருத்ததா? அல்லது சூழ்நிலையைப் பொருந்ததா? என்று வள்ளுவரும் நன்கு ஆராய்ந்துள்ளார். மனநிலை சூழ்நிலை இரண்டும் தூயதாகவேண்டும் என்பவர் வள்ளுவர். நம் வீடு எவ்வளவு தூய்மையாயிருந்தாலும் ஊரின் கழிநீர் தேக்கத்தால் நம் வீட்டினுள்ளும் கொசு வருவதுபோல, சூழ்நிலைக்கு அனைவரும் ஆளாகவே செய்வர். இதனல், நம் வீடு தூய்மையாயிருப்பது குற்றமாகிவிடாது. இதுபோல சூழ்நிலையை ஒட்டித்தான் மனம் அமைய முடியும். இதை வள்ளுவர் பல்வேறிடங்களிலும் விளக்கியுள்ளார்.

உழவினர் கைமடங்கின் இல்லை விழைவதும்
விட்டோமென்பர்க்குநிலை. 1036

(உழவர் வேலை நிறுத்தம் செய்துவிட்டால் துறவியும் கூட நிலைபெறமுடியாது.)

தானம் தவம் இரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்காதெனின்.

(தானமோ தவமோ நடைபெருது மழையில்லையென்ருல்.)

மனத்து உளது போலக் காட்டி ஒருவற்கு
இனத்து உளது ஆகும் அறிவு.

(அறிஞனுக இருப்பினும் அவன் சூழ்நிலை அளவு தான் அறிவு வளர்கிறது)

என சூழ்நிலையின் ஆற்றலைப் புலப்படுத்தியுள்ளார்.

இதுபோலவே,

சிறை காக்கும் காப்பு எவன் செய்யும் மகளிர்
நிறை காக்கும் காப்பே தலை

மனவொருமைப்பாட்டால்தான் கற்பு நிற்க முடியும் காவலால் அல்ல என்று கூறியுள்ளார்.

## இன்றைய சூழ்நிலை தோன்றியதெப்படி?

காற்று, குடிக்கும் நீர் இவை உலகின் பொதுப் பொருள்களாக இருக்கின்றன. இவை மனிதனுல் விலை கூறும் அளவு கட்டுப்படுத்தப்பெறவில்லை இன்று வரை. ஆனல் பிறபொருள்களை மனிதன் தன் கட்டுப்பாட்டினுள் அடக்கிவிட்டான். தண்ணீர் உலகின் பெரும் பகுதியாக உள்ளது. தோண்டும் பல இடங்களிலும் அது ஊறுகிறது. தேவைக்குமேல் கிடைக்கவில்லையென்ருல் அதையும் கூடத் தடைசெய்து தனியுரிமையாக்கி விலை பேசியிருப்பர் வல்லரசுகள். ஆனுல் மக்களினத்திற்குத் தேவையான உணவு முயற்சி செய்யும் அளவுதான் கிடைக்கிறது. ஆகவே,அதை அரசாங்கமும் வணிகரும் தம் கட்டுப்பாட்டினுள் வைத்து விலை பேசுகின்றனர். உணவுப் பொருள் தண்ணீர்போல் ஏராளமாகப் பெருகினுல் ஒழிய என்றும் கட்டுப்பாட்டினுள்தான் இருக்கும். இன்றே கிடைக்கும் பொருள் முழுவதையும் வாங்கி முடக்கிவிட்டு விலை பேசுகின்றனர். செல்வர் உணவுப் பொருள்களைக் கட்டுப்படுத்திவிடுவதால் உணவு கிடைப்பது எங்கே என்று தவிக்கும் ஏழையையும் தின்பது செரிக்காது திணறும் செல்வரையும் சூழ்நிலையுண்டாக்கிவிட்டது. மக்கள் படும் ஏழ்மைக் கொடுமையையும் துன்பங்களையும் கண்ட, இளகிய உள்ளத்தவர்தாம், துன்பம் போக்கி தூய வழி காண முற்பட்டனர்.

துன்பம் எது என்று கண்ட பின்புதான் புத்தர், அத் துன்பத்தினின்றும் மீளும் வழிகாண முற்பட்டார். அது போல் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் துன்பம் துடைக்கவந்த வள்ளுவருக்கும், 20-ஆம் நூற்றுண்டிற்குச் சற்று முன் தோன்றிய பொதுஉடைமைத் தந்தை மார்க்சுக்கும், துன்பம் துடைக்கவேண்டும், இவ்வுலக வாழ்வு இன்பமுடையதாக வேண்டும் என்ற குறிக்கோளே ஏறக்குறைய ஒரே வகை எண்ணங்களை அவர்கள் உள்ளத்தில் காலங்கடந்தும், மொழி வேறுபட்டிருந்தும் உண்டாக்கியுள்ளது. வள்ளுவர் மார்க்சு காலத்திற்கு இருபது நூற்றுண்டுகளுக்குமுன் இருந்தவர். எனினும்,வள்ளுவர் மக்கள் வாழ்வைப் பொருளியல் ஏற்றத் தாழ்வு, பாகுபடுத்தலைத் தெளிவாகக் கண்டார். உள்ளவனையும் இல்லாதவனையும் வேறுபடுத்திய பொருளின் செயலை உணர்ந்து பொருளுடைய செல்வனையும், ஈட்ட இயலாத தன்மையில் உள்ள ஏழையையும் கண்டு பொருளியல் முரண்பாடுகளை நீக்க வழிகாண முற்பட்டுள்ளார்.

செல்வர் உள்ளம்போல ஏழையின் உள்ளம் அறிவுடையதாக இல்லை. “பசி வந்திடப் பத்தும் பறந்து போம்” என்பதுதான் ஏழையின் நிலை. தவத்தோர்க்கே கட்டுப்படாத மனக்குரங்கு உலகுக்கே எளியனுகப் படுகிற ஏழையிடமா இரக்கப்படும்? பசி குடலைமட்டுமல்ல. ஏழையின் அறிவையே தின்றுவிடுகிறது.

பொச்சாப்புக்கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக் கொன்ருங்கு 532

(வறுமை நிலைத்து நிற்குமானல் அது ஏழையின் அறிவையும் தின்றுவிடுகிறது.)

பசியால் அவன் படும்பாட்டைப் பார்க்கவோ அருள் கொண்டு அவனுக்கு உதவவோ மறுக்கும் உலகை அவன் வெறுக்கிருன். உலகம் செல்வம் உள்ளவர்களுக்குப் பாதுகாப்பளிக்கும் வகையில் தீட்டியிருக்கும் ஒழுக்க வரம்புகள் அவன் கண்ணிற்குத் தவருகப் படுகின்றன. பள்ளியில் நல்ல பதில் சொல்லியவர்கள் மக்கு மாணவர்களைக்குட்டுவதை, மக்குமாணவன் அப்போது ஆசிரியருக்

காகப் பொறுத்துக்கொள்கிருன். ஆனுல் வெளியே வந்தால் வேறுவிதமாகவே நடக்கும். அதுபோல் ஏழை முதலில் அடங்கியும் வழி அற்றுப்போனபோது திருடவும் துணிகிருன். இந்தப் புது வழி, முறையற்ற வழியாக அமைகிறது. பழைய வழியில் வயிற்றை அவன் நிறைவு செய்ய இயலவில்லே. தன் பிழைவழியால் பிறர்படுகிற இன்னலே எண்ணும் அளவு அவன் பண்பட வயிறு விடுதில்லே, பண்பாடோடு பசி போட்டியிடுகிறது. பசி தீர்கிற போது பண்பாடு போய்விடுகிறது. பண்பாடுள்ளவரை உயிர் தீர்ந்தாலும் பசி தீர்வதே இல்லே.

பொருளிலார்க்கிவ்வுலகமில்லே. இல்லாதவனிடம் நல்ல உள்ளம் மட்டும் இருந்து என்ன செய்யும் ?

முதலில் தன் நிலே கூறி உள்ளவனிடம் கேட்கிருன் உள்ளவன் ஒளிக்காது கொடுத்தால் கடனுகவோ, கைமாற்ருகவோ, பிச்சையாகவோதான் அமைகிறது. கடன் வாங்கவும் ஓரளவு மதிப்பு வேண்டும். கைமாற்று பெறுவதற்கும், பெறுபவன் திரும்ப அளிப்பான் என்ற எண்ணம் கொடுப்பவனுக்கு ஏற்பட்டால்தானே நடைபெற முடியும். இவை இரண்டுமற்ற நிலேயில் பெற்ருல் அது பிச்சையாகிவிடுகிறது. மானம் இழந்து சிலர் கேட்க முன் சென்ருலும், கொடுப்பவர் பலர் இருந்தால்தானே குறை நீங்கி அவர் வாழ்வு பெறமுடியும். பிச்சைக்கும் வழியில்லேயென்ருல் நேரானவழி மட்டுமே செல்ல வேண்டுமென்ற மனம் நின்று விடுகிறது. வயிற்றின் கொடுமையால் பொறுமையிழந்து உள்ளவனேக் கேட்க, கேட்பதால் அவன் நேற்று வரை நண்பனுக இருந்தாலும் வேண்டாதவனுகி பின் உள்ளதையும் மறைத்து வைத்து,இல்லேயென்று, கூசாது சொல்வானுயின் ஏழை என்ன செய்வான் ?

"மயிர் நீப்பின் வாழாக் கவரி மாவன்னுர்
உயிர் நீப்பர் மானம் வரின்"

ஏழை எந்த அளவுக்கு நல்லவனுக இருக்கிருனே அந்த அளவு மானம் இழக்காமல், ஆனுல், உயிர் இழக்கத் துணிந்து விடுவதை நமக்குக் காட்டுகிறது இக்குறள். உயிரிழக்காதவர்கள் மீண்டும் பிறரிடம்

சென்று பிச்சை கேட்கத்தானே வேண்டும். ஏழை மனம் ஒரு மரக்கலம். கடலிலே சென்ற கலம் கரை சேர்ந்தால் ஒழிய சென்றது திரும்பி வரும் என்று நம்பமுடிவதில்லை. கழைக் கூத்தாடியின் ஆட்டத்திலாவது கயிறு, கழி, ஆட்டம், உயரம் இவைகள் மாறுபடுவதில்லை. ஆனால் கடலிலே சென்றவனைத் திரும்பவும் காணும்போது உற்றார் பெருமூச்சு விடக்கூடிய அளவு கடலில் ஊறுகள் உண்டு. திமிங்கலம், சுறுமீன் முதலியன ஒரு பக்கம். கடல் கொந்தளிப்பு, நீரிழுப்பு, மாலை ஏற்றம், காலை இறக்கம், சுழல் அலை, இவை ஒரு பக்கம். எதிர்பாராப் பெருமழை, புயல் மற்றோர் பக்கம், இவைகளோடு கடற் கொள்ளையும் உண்டென்றால் கேட்கவே தேவையில்லை. அந்த அளவு மிகுதியான இடையூறுகள் ஏற்பட வழி உண்டு. தோணி கவிழாமல், துடுப்பு ஒடியாமல், ஓட்டு பவன் உடம்புக்கு நலக்கேடு ஒன்றும் வராமல் நன்றாய் இருக்கவேண்டும். பகலில் திசை கண்டு வரவேண்டும். இருட்டினாலோ திசையறிய விண்மீன்கள் தெரியவேண் டும். மேகம் மூடிவிட்டால் கலங்கரை விளக்கின் ஒளி எட்டப்பெற்றால் தான் தோணி கரையை எட்டிப்பிடிக்கும். இது நாளும்நடைபெற்றாலும் எளிதான செயலல்ல. இது போன்றதே வறுமையும்.

"நல்குர வென்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்"

(வறுமைக்கீடான துன்பம் இல்லை)

"இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு"

(கொலை போன்ற அச்சத்தை வறுமை தருகிறது)

இத்தத் தோணியை விடத் தாக்குப் பிடிக்க இயலாத நிலை ஏழையின் நிலை. ஒருவனுக்கு எவ்வளவோ துன்பம் வரலாம். ஆனால் ஏழ்மை மட்டும் வரக்கூடாது. இந்த ஒரு துன்பத்தோடு பிற எல்லாத் துன்பத்தையும் அடுக்கிவைத்துப் பார்த்தால் கூட வறுமையளவு துன்பம் தருவது பிறிதெதுவும் இருக்கமுடியாது. இந்த வறு மையை நாம் பிச்சையெடுத்தே நீக்கிக்கொள்வோம்

என்று நினைப்பதைவிடப் பெருங்கொடுமை தரும் எண்ணம் பிற எதுவும் இருக்க முடியாது என்கிருர் வள்ளுவர்–இதை

"இன்மை யிடும்பை யிரந்து தீர்வாமென்னும்
வன்மையின் வன்பாட்டதில்" என்ருர்.

ஆதலின் மானம் உடைய ஒருவன் இரந்து உயிர் வாழப் பலர் இடியும் பெற வேண்டி வரும். ஏற்கனவே இவன் வாழ்க்கைக்கு இருந்த மனத் துணிவும் கெட்டதால் வாழ்க்கையைச் செலுத்த வழி யறியாது செல்கிருன். தோணி கவிழாமலும், வேண்டிய இடத்தே உடன் திருப்பிச் செலுத்தவும் சுக்கான் இணைக்கப் பட்டிருக்கும். சுக்கானும் இல்லாமல் திசையும் அறியாமல் துன்பத்துட் பட்டுச் செலுத்தப் படும் தோணி போன்றது, தொழில் இழந்து மனம் உடைந்து பிறரிடம் ஏச்சுப் பெற்று பிச்சை யேற்கப் புகுவான் நிலே. ஏற்கனவேயே மன முடைந்து வருகிற அவனே உள்ளவன் உள்ளன்போடு அள்ளித்தருதல் வேண்டும். ஆனுல் அதற்கு மாருக உள்ளத்தை மறைத்து, வலிய உள்ளம் கொண்டு, இல்லே, போ என்று தாக்குகின்ற சொற்களேச் சொல்வானேயானுல் அவன் நிலே என்னுகும்? கொடுப்பான் என்று கருதிச் சென்ருன்..............உள்ளவனுயிற்றே என்று கேட்டான்.........செல்வனின் எதிர்பாராத இந்தச் சொல் ஏழையைத் தாக்குமானுல், சுக்கானே இழந்த தோணி நீரினுள் மறைத்து நின்ற வலிய பாறை தாக்க எவ்வாறு சிதறுமோ அதைப் போல மனமுடைந்து மாள்வான் என்பதை

"இரவென்னும் ஏமாப்பிருேணி கரவென்னும்
பார்தாக்கப் பக்குவிடும்" என்ருர் வள்ளுவர்.

மானத்துடன் வாழ எண்ணியும் இயலாமல் ஒழுங்கு முறையில் இருந்து மாறித் திருடராக, கொலேயாளராக மாறியவர்கள் இத்தகைய பாறைகளில் எத்தனே முறை மோதினுர்களோ? ஆதலின் இல்லாதவர்களுக்கு இருந்ததெல்லாம் குற்றம் உடையதாகிய தீய வழி. வேறு வழி

யற்றபோது எளிய வழி. அது வயிறு காட்டிய ஒரே வழி. பொல்லாத ஆனால் இன்றும் நிலவும் வழி.

பழக்கத்தால் தாம் செய்யும் வினை எப்படிப்பட்டது என்பதை அறியாத சிலர் குற்றத்தைத் தொழிலாகக் கொண்டுள்ளார்கள். குடியர்களைத் தெளிவுற்று இருக்கும்போதும், கயவர்களை இடிக்கும் வலியுள்ளபோதும் அன்புடையார் திருத்த முற்படுவார்கள். வலியைத் துணை கொண்ட மன்னன் இடித்துத் திருத்தும் தொழில் களவு, கொலை இவை போன்றனவே. அவர்களைக்கூட ஒடுக்க, சிறையில் தள்ள செங்கோல் முயலுகிறதே தவிர திருத்த முற்படுவதில்லை. கோலுக்கு அந்த வன்மையில்லை. இன்னாத சொற்களால் திருத்துவதும் இயலாது. இனிய சொற்களாலேயே மனதைக் கவர முடியும். ஆதலின் அன்பு மொழிகளால் அவர் செய்யும் தீங்கினைத் திருத்த முற்பட்டுள்ளார் வள்ளுவர்.

## ஈதல் அறம்; ஏற்றல்?

நாட்டின் நல்வாழ்வு பொருள் சுழற்சியால் வளர்கிறது. பொருள் முடக்கப்படுமானால் தொழிலால் நாடு தழைப்பது அரிது. வள்ளல்களான சிலர் ஈவதன்மூலம் பொருள் உருளுகிறது. இதனால் ஏற்பவர்கள் சோம்பேரிகளாக வழியுண்டு. ஆனால் அவ்வாறு வாழ்வதை, பிச்சையை, வாழ்வின் தொழிலாகக் கொள்வதை வள்ளுவர் எங்கும் கண்டித்தே கூறியுள்ளார்.

இன்றுகூட இல்லாதவன் இரப்பதைக் குற்றமாக உலகோர் கருதுவதில்லை. நம் எதிரிலே ஒருவன் தடுக்கி வீழ்கிறான். கேலியாகப் பல வேளைகளில் பக்கத்தவர் சிரிப்பதைப் பார்க்கிறோம். வீழ்ந்தவன் அடிபட்டு எழுந்திருக்க இயலாது கிடப்பானானால், தூக்கிவிட நாமே ஓடுகிறோம். உதவியும் செய்கிறோம். வீழ்நாள் படாமை நன்றாற்றின் வாழ்நாள் வழியடைக்கும் கல்—குறள். இது உலக இயல்பு. இதுபோலவே வாழ்க்கைப் பாதையில் தடுக்கி வீழ்வதும் பார்ப்பவர் பலர் நகைக்க வழி

செய்கிறது. வீழ்ந்தவர் எழ முடியாத போது, எழுந்து நிற்க, நேர் வழிக்கு வர பிறர் துணை தேடுவதில் தவறென்ன? உற்றவர் உதவவேண்டும். உதவாத போது உள்ளவரிடம் கேட்பதில் என்ன தவறு? வாழ்வில் ஏற்படும் வறுமையை உறவினரைக் கொண்டு நீக்க, எதிர்பாரா இழிதகவை, நண்பரைக் கொண்டு மாற்றிக் கொள்ள உறுதியாக அளிக்கக்கூடிய செல்வரை இரந்து துடைத்துக் கொள்ள முற்படுவது தவறன்று. வறுமை தன் குடும்பத்தை வாட்ட, நண்பர்களை நாடவோ, உறவினரை நெருங்கவோ துணிவின்றி மனைவி மக்களைத் தவிக்கவிட்டு குடும்பத்தை விட்டே ஓடுகிற நளன்களை விட ஏற்பவர் செயல் எவ்வளவோ ஏற்றமுடையதுதான். வறுமை நோய்க்கு ஆளானவர்கள் மீண்டும் கரையேற இடைக் காலத்தே பிறரிடம் பொருள் ஏற்பதை வள்ளுவர் உடன்படுகிறார். ஆனால் அவரே இரக்கின்றவர்களைப் பார்த்து அதையே என்றும் தொழிலாளகக் கொள்ளா மலிருக்க அவர்களிடம் வள்ளுவரே பிச்சை கேட்கிறார். நாம் பிச்சையை மேற்கொள்வது, கேட்பதைக் கொடுப் பவர்கள் இருக்கிறார்கள் என்பதுதானே. கொடுப்பதானாலும் மேன்மேலும் கேட்கத் தொடங்காதீர்கள்—கேட்பின், கொடுப்பவர்கள் கொடுக்க மனமில்லாமல் மறைப்பார்கள் என்கிறார். அது மட்டுமின்றி, மேலும் மேலுங் கொடுத்தாலுங்கூட, நீங்கள் இரவாது இருத்தல் மிக்க பெருமை தரும். பொருள் தேட முயற்சி செய்யுங்கள். தெளிந்த நீர் போன்ற கஞ்சியானாலும் உழைப்பால் அடையுங்கள். அதற்கு ஈடு எதுவும் இல்லைஎன்று உழைப்பின் உயர்வைச் சொல்கிறார். பொருள் சேர்க்க முயலாது தன் சுற்றத்தையும் உடன் வைத்து வாழ்பவன் பிறரின் புளித்த கஞ்சிக்கும், அதிலிடும் உப்பிற்கும் எமனாக விளங்குகிறான், என்பதை

"துப்புற வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்குங் கூற்று." என்றார்.

துன்பத்துள் மூழ்கிக் கிடக்கும் ஏழையரை உலகில் அனைவரும் இடித்துக் கூறுதல் இயல்பு. ஆனால் ஏழையின்

உள்ளம் அறிந்த வள்ளுவர், அவன் பிறரிடம் கையேந்த நேரிடுகிறதே என்று வருந்துவதையும், அவன் ஏந்தியும் இல்லை என்று கூசாது கூறுவோரால் அவன் உளம் படும் புண்ணையும் நன்குணர்ந்தவர். இருப்பவன் இல்லையென்று மறைப்பதைக் கண்டு, இல்லாதான் வெட்கி, தான் மானம் இழந்தமைக்கு நாணி உயிர் விடுகிருனே, அது வியப்பு அன்று. ஆனல் தன்னையொத்த ஒருவன் தன்னிடம் பிச்சை கேட்டும், கிடைக்காமல் இறுதியில் சாகும் நிலையைத் தான் கண்ணுரக் கண்டும் சிறிதளவும் நெஞ்சம் நெகிழாமல், இளகாமல் கல் நெஞ்சனுகக் காட்சி அளிக்கிருனே, அவன் எவ்வாறு இன்னமும் உயிர் வாழ்கிருன் என்ற வியப்பை

"கர்ப்பார்க்கி யாங் கொளிக்குங் கொல்லோ
இரப்பவர் சொல்லாடப் போஒம் உயிர்" என்று

கூறும் குறளால் அறிவிக்கிருர். ஆகவே இரத்தல் தொழிலும், இரக்கும் மக்கள் ஒரு நாட்டில் பெருகுவதும் அந்நாட்டிற்கு என்றும் நீங்கா நலிவையே தரும். நாட்டின் நலம் பெருகி புகழ் ஓங்க வேண்டுமானல், அந்நாட்டின் வறுமையையும், அவ்வறுமையைப் படம் பிடித்துக் காட்டும் இரப்பவர்களையும் இல்லாமல் செய்யவேண்டும், அவ்வாறு செய்ய முற்படும்போது அதற்குத் தடையாக, எவர் வந்தாலும், அரசோச்சும் மன்னராக இருந்தாலும் அன்றி உலகத்தையே ஆட்டிப் படைக்கும் வேறு எந்த ஆற்றலாக இருந்தாலும் அதை அழிக்க வேண்டுமென்கிருர்.

இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின்
பரந்து கெடுக உலகு இயற்றியான்.

# 3. ஒற்றுமையும் வேற்றுமையும்

பொருளால் ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட இன்னலைத் துடைக்கக் கருதிய அளவில் மார்க்சும் வள்ளுவரும் பொதுவான ஒற்றுமை உடையவர்கள். இருவரும் நம் கண்முன்னே அலைதாடியோடு தோன்றுவார்களானல் திராவிடரின் பொன்னிறமும் மேலை நாட்டாரின் வெண்ணிறமும் தவிர உருவத்தில்கூட ஒன்ருகத் தோன்றலாம்.

ஆனல் அவ்விருவரும் காலத்தால் கி. மு. முதல் நூற்ருண்டுக்கும் கி. பி. 18-ம் நூற்ருண்டுக்கும் உள்ள இடைவெளியைப் பெற்றுள்ளனர்.

கி. மு. வில் இருந்த சூழ்நிலை வேறு. கி. பி. 18-ம் நூற்ருண்டில் இருந்த சூழ்நிலை வேறு. பத்து ஆண்டுகளில் நாம் காணும்படி விளையும் மாற்றங்கள் பல. ஆயினும் பல ஆண்டுகளுக்கு முற்பட்டவரின் வழியை நேற்று தோன்றிய மார்க்சின் கருத்தோடு ஒத்திட்டுப் பார்க்க முனைகிருேம் என்பதை மறந்துவிடலாகாது.

வள்ளுவர் வாழ்ந்த காலத்தில், நாட்டில் விளங்கிய செல்வர் நிலக்கிழார் என்னும் பெரும் பண்ணையாளர். மார்க்சு காலத்தே விளங்கியவர்கள் மாபெரும் ஆலையரசர்கள்.

பண்ணை பெரியதானல் உயர்ந்த அளவாக 500 ஆட்கள் வேலை செய்வர். ஆலைகளில் ஆயிரக் கணக்கில் ஆட்கள். அதுமட்டுமன்று. ஆலையே ஆயிரக்கணக்கானவர் ஆக்கும் பொருளை தானே செய்வது. பண்ணைக்கு வருமானம் ஓராண்டுக்கு மிகுதியாக விளையும் போது 50 ஆயிரம் கிடைக்கலாம். ஆனல் கோடிக் கணக்கில் ஆலை அரசருக்கு வருமானம், பண்ணையின் வருமானம், பயிர் விளையும் பருவம், அக்கால மழை, ஆற்று நீர்ப் பாய்ச்சல், அதிலிடப்பட்ட எரு, உழைப்பு இவற்றைப் பொறுத்தே உறுதியாக வேண்டும். ஆலை அப்படியன்று. அதன் வளர்ச்சி, அரிய பொருள்களையும்,

பெரும் அளவில் உடன் செய்தளிக்கும் முறையில் வளர்ந்திருக்கிறது.

மார்க்சு காலத்தும் பண்ணைகள் பலவும் பழங்காலத் தன போலவே இருந்தன. பண்ணைகளுக்கும் ஆலை களுக்கும் உள்ள வேறுபாடு வருமானத்தில் மலைக்கும், மடுவுக்கும் உள்ள அளவு இருந்தது. ஆலையரசுகளின் வளர்ச்சி நிலக்கிழார்களோடு ஒப்பிட முடியாத அளவு விரைந்து வளர்ந்தது. இந்த வளர்க்சி வேறுபட்டிருந்த போதிலும் வேறுபடாமல் நின்றது பசி; அதற்கு அடிப் படையாக விளங்கிற்று சுரண்டல். சுரண்டலை ஒழிக்க இருவரும் வழி கண்டனர்.

சுரண்டுபவன் சுரண்டப்படுபவன் இவருள் எவரைத் திருத்த முடியும்? உள்ளவனையா? இல்லாதவனையா? ஏழையைத் தூண்டுவதன்மூலம் செல்வனை நேர்வழிக்குக் கொண்டுவர முயலுகிறார் மார்க்சு. வள்ளுவர் இருவர் நிலையையும் கண்டு குற்றமுள்ளவர்களை இடித்துத் திருந்தக் கூறுகிறார். ஏழை எப்படி உண்டாகிறான் என் பதைக் கண்ட மார்க்சு, ஏழை ஏமாற்றப் படுகிறான். ஏழையின் உழைப்பு கொள்ளையடிக்கப்படுகிறது. முதல் முதல் உடையவனின் திருட்டுத்தான் (லாபம்) ஊதியம் என்று பெயர் பெறுகிறது என்றார்.

ஏழைகளின் வியர்வைத்துளிகள் தான் செல்வரின் சிறக்த அணிகளாக, அழகு ஆடைகளாக, அலங்கரிக்கும் வண்ணப் பொருள்களாக மாறுகின்றன என்பதை எவரும் மறுக்கவோ, மறைக்கவோ முடியாது என்றாலும் ஏழையை ஏமாற்றிவிட்டு அவன் அறியாமலேயே இவைகள் நடைபெறுகின்றன என்று சொல்லமுடியாது.

ஏழையின் கண் முன்னே உடன்பாடுபெற்றே நெற் களத்தே, உழுது உழைத்தவனுக்குக் கஞ்சிக் குரியதைக் கொடுத்துவிட்டு, பெரும் பொருளை நில உரிமையாளன் கொண்டு செல்கிறான். செல்வனுக்கு ஆக்கிக் கொடுத்து, அதைத்தானே தூக்கிச் சென்று அவன் வீட்டில் போடுவ தோடு தனக்களித்த கூலிக்காக நன்றி மிக்கவனாகவும் விளங்குகிறான். கொள்ளையடிப்பதாகவே வைத்துக்

கொண்டாலும் ஏழை அறியாத முறையில் நடப்பதன்று. இதை ஏழையும் தன்னை ஏமாற்றியதாக உணர்வதில்லை. உணர்பவர்களுக்குக்கூட வழக்கத்தால் துடிப்பு ஏற்படுவதில்லை. உலகில் சிலரே துடித்தார்கள். நீக்ரோ—பல்லாண்டு காலமாக அடிமைப்பட்டு அடிபட்டான் அதைக் கண்டு உணர்ந்து துடித்தான் ஆப்ரகாம் லிங்கன். புரு அம்பு பாய்ந்து வீழ்ந்தது. அதைக்கண்டு துடித்தான் புத்தன். இதுபோன்ற நிகழ்ச்சிகளை மக்கள் அதுவரைப் பார்த்ததே இல்லையா? கொடுமைகள் பலவற்றை மக்கள் நாளும் பார்க்கிறார்கள். ஆனால் பழக்கத்தால் கொடுமைமைகளைக் கண்டு துடிப்பதில்லை. இந்த இருபதாம் நூற்றாண்டில்கூட தொழிலாளர்க்கு நாம் சுரண்டப்படுகிறோம், நம் உழைப்பே முதலாளி அடைந்த ஊதியம் என்ற உணர்வு எளிதில் ஏற்படாதபோது மார்க்சு காலத்தோ, அல்லது எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட வள்ளுவர் காலத்தோ தொழிலாளர்களுக்கு இவ்வுணர்வு எப்படி ஏற்பட்டிருக்க முடியும். நெறியற்ற முறையில் போர்க்காலத்தோ, பிற வேளைகளிலோ, அடித்த கொள்ளையைப் படித்த சிலரும்கூட வாய்ப்பு நல்லூழ் (அதிர்ஷ்டம்) என்று இன்றும் நம்புகிறபோது, படிக்கும் வாய்ப்பற்ற தொழிலாளி சுரண்டலை உணராதது எப்படி வியப்பாகும்? பாரதியார் பாடியபடி "கஞ்சி குடிப்பதற்கில்லார், அதன் காரணமும் இவையெனும் அறிவுமில்லாராய்" இன்றைய மக்களே இருப்பார்களேயானால், வள்ளுவர் காலத் தொழிலாளர் அவ்வுணர்வு பெற்றிருக்க இடமில்லையன்றோ. மேலும் தொழில் அமைப்பும், பிற்காலம் போல சுரண்டலையே முழு நோக்கமாகக் கொள்ளவில்லை அந்நாள்.

ஏழ்மைக்குக் காரணங்களைக் காண்பதில் இருவர் கொண்ட முடிவும் சரியாக இருந்த போதிலும் அதை எவ்வாறு போக்கவேண்டுமென்பதில் கைக் கொண்ட முறைகள் வேறுபடக் காண்கிறோம். ஒரே முடிவைக் காண்கிறோம். ஒரே முடிவைக் கொண்டவர்கள் மட்டுமல்ல. ஒரே கொள்கையைக் கொண்டவர்கள் கூட வேறுபடுவதுண்டு.

## ஒற்றுமையில் வேற்றுமை.

லெனின், டிராட்ஸ்கி இருவரும் பொதுஉடமைக் கொள்கையினரே. இருவரும் பற்றிய வழி மார்க்சு கண்ட நெறிதான். இருவரும் மார்க்சு கண்ட ஒளி எது என்று தெளிவாக உணர்ந்தவர்கள் தான். இருந்தபோதிலும் பிளவுபட்டார்கள் நடைமுறையில் வேறுபாடுகள் கண்ட போது.

மார்க்சு, தொழிலாளர் அரசு நிறுவுவதற்கு எதிராக உலக முதலாளித் தன்மை கொண்ட நாடுகளும், வல்லரசு களும் இடையூறு செய்யும் என்ருர். 1848லேயே 'ஐரோப் பாவை ஒரு "பூதம்" மிரட்டிக்கொண்டிருக்கிறது. அதுதான் கம்யூனிசம். அதை அழிக்க பழைய ஐரோப்பாவின் அரசு கள் அனைத்தும் கூட்டணியில் திரண்டு நிற்கின்றன.' என்றே கம்யூனிச அறிக்கையைத் தொடங்கினர் மார்க்சு. ஆதலின் தொழிலாளர் ஆட்சி நிலைபெற உலக முழுவ தும் முயற்சி செய்யபெறவேண்டுமென்று கருதினுர்.

இந்த கருத்தை லெனின் — டிராட்ஸ்கி இருவரும் ஏற்றுக்கொண்டனர். ஆனல் ரஷ்யப் புரட்சி முடிந்த உடன் உலகின் பல பகுதிகளிலும் உடனடியாகப் புரட்சி செய்து உலகைப் பொதுஉடமையாக்க வேண்டுமென்ருர் டிராட்ஸ்கி. அவர் கருத்துக்கு மாருனவர் எற்றம் பெற்ற தால் தாழ்த்தப்பெற்ருர். டிராட்ஸ்கி மறைந்தார் இன்று. இன்று ரஷ்யாவில் புரட்சியைப் பயனுடையதாக்கி ஆட்சி யைக் கைப்பற்றி நாட்டையாண்டு பொதுஉடமையை உலகுக்கு வழிகாட்ட எண்ணிய லெனின் புகழுடம்பால் இன்றும் வாழ்கிருர்.

மார்க்சு கருதியதுபோல் ரஷ்யாவிற்கு மற்றைய ஐரோப்பிய ஆட்சிகள் தீங்கையே செய்தன. இவ்வாறு தீங்கு இழைப்பர் என்பது முன்னரே எதிர்பாராதது அல்ல. மார்க்சு முன்னரே சொல்லியதுதான். தீங்கை ஒழிக்க தீயை உடனணைப்பதா? தீயிலிருந்து முதலில் நம்மைக் காப்பாற்றிக்கொள்வதா? என்பதுபோலக் குறிக் கோளில் வேறுபடாது — ஆனல் நடைமுறை முரண்

பாடு வரும்போது பெரும் தலைவர்களும் வேறுபடக் காண்கிறோம்.

டிராட்ஸ்கியின் முடிபு தாழ்வைத் தந்துவிட்டது. லெனின் முடிபு இன்று, அவரை அழியாப் புகழ் உடையவராக ஆக்கியுள்ளது. இதுபோல செயல் நிகழ்கிறபோதே சிக்கல் பல. ஆதலின் எதிர்காலம் நோக்கி எழுபவைகளில் அவிழ்த்துக் காணமுடியாத சிக்கல் பல இருந்திருத்தல் கூடும். ஆயினும் இவை வேறுபாடே தவிர, முரண்பாடுகள் அல்ல.

வள்ளுவரோ, மார்க்சோ எல்லாச் சிக்கல்களையும் அறவே நீக்கிவிட்டார்கள் என்று கருத முடியாது. அவ்வாறு கருதுபவர்கள் புது மதவாதிகள் ஆவர். வள்ளுவரையும், மார்க்சையும் கடவுளாக்கிக் குருட்டு நோக்காகப் பின்பற்ற சிலர் நினைக்கலாம். அவ்வாருனல் அவர்கள் இருவரும் காட்டிய வழியில் மேலும் செல்ல முற்படாதவர்களாவார்கள்.

முழுவட்டத்தில் தொடக்கம் எது என்று காண்பது கடினம். ஆயினும் ஆரம் இடைவெளியில் கிடக்கிறது. இரண்டு கோடுகளாக எல்லாப் பக்கத்திலும் தென்படும் வட்டம். ஆனல் அது ஒரேகோடு. அதுபோல் வள்ளுவரும் மார்க்சும் வேறுபடுவது போல் தோன்றுவது ஒற்றுமையாய் முடிகிறது.

மார்க்சு காட்டிய வழி வந்தவர்தான் லெனின். மார்க்சு கண்ட கொள்கை ஆலைத் தொழிலாளியே தலைமை வகுத்துப் புரட்சியை நடத்தமுடியும் என்பது. வேறுபடவில்லையென்ருலும், லெனின் இதற்குப் புது விளக்கம் தரவேண்டிய நிலை பிற்காலத்தில் ஏற்பட்டது.

"உழுவார் உலகத்தார்க்கு ஆணி"

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்" என்ற

வள்ளுவரைப்போல மார்க்சு உழவரை உலகிற்கு ஆணியாகக் கருதவில்லை. வள்ளுவர் காலத்து ஆலைத் தனித் தொழிலாளரும் இல்லை. அறுதொழிலோர் இருந்தனர். இருந்த பல தொழிலாளருள்ளும் உழவுத்தொழி

லாளரையே சிறப்பாகப் போற்றியுள்ளார். மார்க்சு ஆலைத் தொழிலாளர்க்கு ஈடு வேறு எத்தொழில் செய்பவரையும் கூறவில்லை.

உழவர் உயர்ந்தவரா? ஆலைத் தொழிலாளர் உயர்ந்தவரா? என்பதல்ல கேள்வி. இருவரும் உயர்ந்தவர்தான்; தம் உழைப்பால் உலகு வாழப் பெரும் பொருள் ஆக்கித் தாம் சிறிதே உண்கின்றமையால் வள்ளுவரோ, மார்க்சோ தொழிலால் மக்களினத்தை உயர்த்தியும் தாழ்த்தியும் காண்பவர்களல்ல. ஜாதி வேறுபாடோ. தொழிலில் உயர்வு தாழ்வோ இல்லையென்பதை இருவரும் ஒப்புவர். வள்ளுவர் தெளிவாக "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையால்" என்றார். இருவரும் இணையானால் இந்த மாறுபாடு ஏன்?

இரு பேரறிஞர்களின் குறிக்கோளும் பஞ்சம் தொலைத்து இன்பம் விளைவிப்பதுதான் எனினும் கைக்கொண்ட வழி முறைகள் வேறு. ஆதலின் கருவிகளும் வேறுபட்டன. மரம் அறுப்பவன் கொள்கிற வாள் இரும்பு அறுப்பவனுக்குப் பயன்பட முடியாது, இரும்பு அறுப்பவனிடம் மரவாள் மதிப்புப்பெறவும் இயலாது. இரண்டும் அறுக்கும் வாள்தான். அறுத்தல் தொழில் ஒன்றாக இருப்பினும் கருவிகள் வேறுபடுவதுபோல, செல்வம் பொதுவுடைமையாக்கப்பட்டு அனைவரும் இன்பம் அடைய வேண்டும் என்ற நோக்கம் ஒத்து இருப்பினும் கருவிகள் வேறுபட்டன; உழவராகவும், ஆலைத் தொழிலாளராகவும். நிலை வேறுபட்ட பாட்டாளிகள் கருவிகளாக அமைந்தனர். கருவிகள் வேறுபட்டது போலவே கருவியால் செப்பனிடப்படும் பொருள்களின் தன்மைகளும் மாறாக இருந்தன, இரும்பும் மரமும்போல.

## யார் வேண்டும் உழவரா-தொழிலாளரா?

வள்ளுவர் கண்ட வன் நெஞ்சர் மனம், எளிதில் அறுக்க முடியாத வைரம் பாய்ந்த மரமாக இருந்ததே தவிர இரும்பாக இல்லை. மார்க்சு கண்ட ஆலையரசர் மனம் சூழ்நிலையால் இரும்பாக மாறியிருந்தது. இந்த

இரும்பைப் பழுக்க வைப்பதன் மூலமே வளைக்க முடியும் என்று கருதினர். ஆதலின் மார்க்சின் குறிக்கோளுக்கு மண்வெட்டி பிடிக்கும் உழவனைவிட இயந்திரங்களை இயக்கும் ஆலைத் தொழிலாளியே தகுதியுடையவனாகப்பட்டான்.

வள்ளுவரின் குறிக்கோள் நிறைவேற உழவனே சிறந்தவனாகப்பட்டான். மார்க்சு கண்டதோ, நாடுவிட்டு நாடு ஓடினாலும், ஆலையைவிட்டு வேறு ஆலையையே நாடும் தொழிலாளி. அவன்பெற்ற பயிற்சியால்ஆலையிலே பெறும் ஊதியமளவு வேறு தொழிலில் ஈட்ட முடியாதவன். தன் திறமையையும், உடல் வன்மையையும் தவிர வேறு எக்கருவிகளும் இல்லாதவன். ஆகவே அடுத்த ஆலையையே தேடும் தனித் தொழிலாளி.

வள்ளுவனின் உழவன் நாடுவிட்டன்று, ஊரை விட்டுக்கூடப் பெயராதவன். ஊரைவிட்டால் வருமானம் குறையும். உழுவித்து உண்பவனாக விளங்கும் கிழாரின் பலவகைக் கொடைகளையும், துணையையும் எதிர்பார்ப்பவன். நிலத்துரிமையாளனின் மாடு, கலப்பை முதலியவைகளும் கூட இரவல் பெற்று உழுதான், பகையின் போது துணைமிகுதிதேவை-ஒற்றுமைப்பாடும் தேவை.

வள்ளுவர் வழியின் தொடக்கமே நல்லதாக இருக்க வேண்டுமென்பார். ஆகவே பகைமையை விழையவில்லை. உழவர் உயர்வை பெறுவதன் மூலம் செல்வரை பணிய வைத்தார். 'உழுவார் உலகத்தார் காணி-பிறர்'

ஒன்றுகத் திரளவும், ஆலையரசரை எதிர்க்கவும் வன்மை வாய்ந்தவர்கள் ஆலைத்தொழிலாளர். உழவரோ செல்வரை எதிர்க்கவும், தொழில் இழந்தால் உடன் வேறு வருமானம் அடையவும் முடியாதவர்கள். இதை நன்கு அறிந்தார் மார்க்சு. மார்க்சு கண்ட தொழிலாளி இரும்போடு இரும்பாய் நின்று ஆலையிலே வேலை செய்தான். அதோடு ஆலையரசர்களின் இரும்பு நெஞ்சங்களை உடைத்து உரிமைப்போர் செய்யவும் பெருங் கூட்டமாகவும், கழகம் அமைத்து முதலாளியை எதிர்க்கவும் கற்றிருந்தான்.

வள்ளுவரின் உழவனே உரிமை முற்றும் பெற்றவனுதலால், தன் கடமை எது என்று உணர்ந்து உலகுக்கு உணவளிக்கவே முற்பட்டான்.

தொழிலாளிகளுக்குக் கிடைக்கும் ஊதியக்குறைவைச் சுட்டிக்காட்டி, பொதுநலத்தில் தன்னலத்தையும் ஊட்டி, எவரையும் வேலை நிறுத்தங்களில் பங்குபெறும் பெருமையுடையவர்களாக்கினுன் மார்க்சின் தொழிலாளி.

வள்ளுவர் உழவனே பிறரான அந்தணர், அரசர், வணிகர் ஆகிய இயல்புடைய மூவரையும் ஊட்டுவித்து, விருந்துபுறத்ததாக உண்ணுத பொதுத் தொண்டு மனப்பான்மையே கொண்டான்.

மார்க்சின் தொழிலாளி "கூலி உயர்வு" வேலை நிறுத்தம் இவைகளை இடையிடையே சொன்னுலும், பொது உடைமை ஆட்சியை நிறுவுவதாகிய பொதுக் குறிக்கோளைக் கொண்டவனுக விளங்கினுன்.

வள்ளுவரின் உழவனே, ஆட்சி பற்றிய பல கருத்துக்களை அறியமுடியாதவனுக இருந்தான். நாமும் ஆட்சியை ஆக்கிப் படைக்கலாம் என்ற எண்ணம் எவ்வகையிலும் அடையவில்லை. அவன் உரிமையைத் தடை செய்பவர் இல்லாததால் உரிமை உணர்ச்சியினும் கடமை உணர்ச்சியே கொண்டவனுக இருந்தான். காரணம் நிலக்கிழார் மிகுந்தும், பண்ணையடிமைகள் மிகுந்தும் இருந்த காலமாக வள்ளுவர் காலத்தைக் கருதமுடியாது. குறள் அளவில் உழுது உண்போர் உழுவித்துண்போர் என்ற பாகுபாடு இல்லை. எந்தப் பண்ணையிடமும் அடிமையாகாது, நினைத்தால் தானே சென்று கரம்பு திருத்தி உழக்கூடிய நிலங்கள் போதிய அளவு தரிசாகக் கிடந்தன என்று கருதவேண்டியுளது. இல்லையே என்று முயலாது இருப்பவனைப் பார்த்து நிலமகள் சிரிப்பாளாம். "நிலமாகிய தன்னைப் பயிரிட்டால் பலன் தர காத்திருந்தும் முயலாதிருக்கிருனே என்று எண்ணியே அப்பெண் சிரிக்கிருள்" என்று வள்ளுவர் கூறுவதிலிருந்து வேண்டிய அளவு பயிரிட வேண்டிய நிலங்கள் இருந்தன என்றே கருதவேண்டி

யுளது. மார்க்சின் கருத்துபடியே பார்த்தாலும் "புராதன பொது உடைமை"யை அடுத்த "நிலக்கிழமையோர் காலம்" வள்ளுவர் வாழ்ந்த காலம். வள்ளுவர் காலத்தி லிருந்து மார்க்சு வாழ்ந்த காலம்வரை உள்ள நிலமை களைக் குறிப்பிட்டால், முறையே கருவி வளர்ச்சியால் பண்ணையடிமை தோன்றியது. பண்ணையார்களை அடக்கும் அளவு ஆலை அரசர்கள் தோன்றினர்கள். பண்ணையாட் களான சிலர் ஆலைத் தொழிலாளராக பெருகினர். ஒருவ ரிடம் வேலை பார்ப்பவர், ஊர் முழுதும் வேலை செய்பவர், நாடுமுழுதும் வேலைசெய்பவர் என்று முறையே வளர்ந்து உலகத் தொழிலாளர் என்று ஒரே அணியாகத் திகழும் நிலை மார்க்சு காலத்தேயே தோன்றியது. ஆலை அர சர்கள் என்ற முதலாளிகளே சிறியவராகும் அளவு, வல் லரசுகளும் தோன்றின. அவைகளோடு காலனி ஆட்சி முறையும் தோன்றின. வல்லரசையும் எதிக்கும் ஆற் றலைத் தொழிலாளர் உலகம் முறையே பெற்றது.

பொருள்களைக் குவிக்கவும், பொருளை பெரும் அள வில் ஈட்டவும் இயந்திரங்கள் பயன்பட்டன. மார்க்சு தொழிலாளருக்கு இயந்திரங்களல்ல விரோதிகள், அதன் பயனைத் தனி நலத்துக்கு ஆக்கும் கொள்கையே தவறு என்று கண்டார். தனிநலத்திற்குத் துணையாக அரசு நிற் கிறது. ஆதலின் ஆட்சியை மாற்றும் அளவு தொழிலாளர் வளர்ச்சிபெற வேண்டுமென்று கருதினர் காரல்மார்க்சு.

மார்க்சு கருதிய வண்ணமே தொழிலாளர் அணி வளர்ந்துள்ளது இன்று. தொழிலாளர் பல்வகை இடரி னைத் தாங்கி, அணிவகுத்து, வேலைநிறுத்தம் செய்யும் அளவு வள்ளுவர் காலத்தே காண யியலாது நிலக்கிழா ரிடம் போரிடத் தகுதியற்றவரே உழவர். மார்க்சு காலத் திலும், ஆலைத்தொழிலாளர் அளவு போராட்டத்திற்குத் தகுதியுடையவராக உழவர் கருதப்படவில்லை. ஆலைத் தொழிலாளர் தலைமையின்கீழ் உழவர் போராடலாம் என்றே கருதப்பட்டது.

வள்ளுவர், தொழிலாளியைத் தூண்டி நேரிடையா கப் போராடச் சொல்லியிருந்தாலும் தோல்வியே பெற்றி

ருக்கும். ஏனெனில், அதற்குரிய சூழ்நிலை உருவாகியிருக்க வேண்டும். அதாவது, தொழிலாளர்கள் புரட்சியை விரும்பினால் மட்டும் போதாது. (சுரண்டுகிறவர்கள்) "பண்ணையாளர்கள் பழைய வழியிலே வாழ்வதற்கோ, பழைய வழியில் ஆள்வதற்கோ வழியில்லாமற் போகவேண்டும். சுரண்டுபவர், சுரண்டப்படுபவர் ஆகிய இருசாராரையும் பாதிக்கக் கூடிய நெருக்கடி ஒரே வேளையில் நாடு முழுவதும் ஏற்பட்டிருக்கவேண்டும்". இந்த நிலை இல்லையென்றால் உண்மையான புரட்சியை எத்துணைப் பெரிய தலைவராலும் உண்டாக்க இயலாது என்கிறது மார்க்சின் கோட்பாடுகள். எந்த மாறுபாடும் திடீர் என ஏற்படுவதும் இல்லை. சில தலைவர்களோ, ஒரு குழுவோ புரட்சியின் மூலம் சமூக மாறுபாட்டை விளைவிக்கவும் முடியாது. பொருள் உற்பத்தி முறை குறிப்பிட்ட அளவு வளர்ந்த பிறகே நிலத்தின் பெரும் பகுதியைத் தனியுரிமையாக்கியிருக்கும் நிலையைத் தகர்க்க முடியும். நிலப்பிடிப்பைக் கிழார்களிடமிருந்து மாற்றி அமைக்கவும் முடியும். இம்முறைப்படி வள்ளுவர் காலச் சூழ்நிலை இடந்தராத ஒன்று.

வள்ளுவருக்கு இருந்த ஒரேவழி, அற உணர்வைத் தூண்டி, செல்வர் தம் பெரும் பொருளைச் செலவிட வைப்பது ஒன்றேயாகும். இவ்வாறு சொல்லியவர் எல்லாம், தொழிலாளரை நிரந்தர அடிமையாக்கக் கருவிகள் ஆயினர் என்பர். வள்ளுவர் எந்தப் பயனும் கருதி அளிக்கக் கூறவில்லை. உலக நலன் கருதியே அளிக்கக் கூறுகிறார். அவர் கருத்தினைக் கூர்ந்து நோக்குவோர்கள், சொத்தினைச் சேர்த்துவைத்துப் பின் செலவிடாமல் இறப்பதைக் குற்றமாகக் கருதுவதை உணரலாம்.

ஆயினும்கூட, மார்க்சு கருத்துப்படி செல்வரை நல்லவராக்குவது என்பது முரண்பாடானது. ஆனால், இது வள்ளுவர் காலச் சூழ்நிலையில் தவறல்ல. தொழிலாளியின் கூலி உயர்வுக்காகப் போராட்டம் நடைபெறுகிறது. "கூலி உயர்வு" கேட்ட அளவு கிடைத்துவிடுகிறது என்று வைத்துக்கொள்வோம். உடனடியாக அமைதி ஏற்படுகிறது.

ஆனால், முதலாளியோடு தொழிலாளி ஒன்றிப்போக வேண்டும் என்று கூறமாட்டார்கள். யார் கூறினாலும் பொதுவுடைமையோர் கூற முடியாது - பொதுவுடைமை ஆட்சியை அடையும்வரை போராட்டம் எப்போது நின்றாலும், அமைதி ஏற்பட்டுவிட்டதாகப் பொருள் அல்ல. ஒத்திவைத்ததாகவே கருத வேண்டும். முழு ஆட்சிக்குப் போக, கூலி உயர்வுப் போராட்டம் அடுத்துத் தொடங்குவது எப்போது என்பதே கேள்வி. ஆகவே, ஆட்சியை அடைய நாலணுப் போராட்டம் இன்று முதல் நிலை. கூலி உயர்வு கேட்பதைப் போலவே அதற்கும் முன்நிலை ஒன்று உண்டு. அதையே வள்ளுவர் முயன்றார். பொய்யா மொழியார் துண்டியபோர் செல்வர் தன்னல மறுப்புக்கேயாகும்.

அவர் உழவரைத் தூண்டியதும், போற்றியதும் நாட்டின் செல்வம் நாளும் ஓங்கவே. பிற தொழிலாளர் பலர் இருக்க உழவரையே போற்றியது உலகின் உயிர் அவர்கள் ஆக்கும் உணவில் இருப்பதால் ஆகும்.

# 4. உழவரே உலகத்தார்க்காணி

உற்பத்திப் பொருள்கள் பலப்பல. நாட்டின் ஆட்சி மக்களால் பற்றப் பெற்ருல் உடன் இயந்திர வளர்ச்சிக்கு இன்றியமையாத ஆலைகள் அனைத்தும் (Key Industries) அரசாங்கம் கைப்பற்றி, நாட்டுடைமையாக்கும். ஆனால், வள்ளுவர் காலத்தோ ஆலை ஏது ? பெரும் தொழிற்சாலைகள் அற்ற அந்தக்காலத்து இன்றியமையாத தொழிலாக உழவே விளங்கியது.

ஆடை நெய்யும் சேணியர், விரும்பும் வண்ணம் இரும்பை ஆக்கும் கொல்லர், அணிபல செய்யும் தட்டார், அரும் பொருள் கொண்டு சென்று விற்கும் வணிகர் அனைவரும் தொழிலாளர்தான் அன்று. ஆயினும், அவர்கள் அனைவரும் உழவர்க்குப் பின்னுகவே கருதப்பட்டனர். மன்னரால் "எட்டி" என்றும் "காவிதி" என்றும் ஏற்றம் பல பெற்றுச் சிறப்பிக்கப் பெறும் வணிகரைவிட வள்ளுவர் ஏழை உழவனை உயர்த்தியுள்ளார். உயர்வற்றதா வணிகம். எளிதானதுகூட அல்ல அன்று வணிகம். அவ்வாறிருந்தும் கிடைத்தற்கரும் பொருளை நாடித் தொலைவான இடங்களுக்குச் சென்று காடுகள் பலவற்றைக் கடந்து ஆறலைப்போரால் அலைக்கப் பெற்று, விடாது வந்து விற்கும் வாணிகச் சாத்தைவிடச் சிறப்பிக்கிருர் உழவரை. ஏன் ?

வாணிபர் உலகில் பொருளை உண்டாக்கவில்லை. விற்கிருர்கள். உலகில் உணவுப் பொருள்களைப் படைக்கும் திறன் உடையவன் உழவனே. வணிகர் விற்பவை உயர்ந்த பொருள்கள். விலைபோகும் பொருள். ஆனால் வாழ்க்கைக்கு இன்றியமையாதவைதானு என்பது அவர்கள் குறிக்கோள் அல்ல. விலைபோகக் கூடியவையா என்பதே பெரிதும் குறிக்கோள்.

உழவு அப்படியல்ல. அனைத்துஉயிரினையும் காக்கும் அரு மருந்து. உழவனின் தொண்டு விலை போக முடிந்தாலும், முடியவில்லையென்ருலும் உலகு முழுதும் காத்து

விடுகிறது. பிறர் பிற தொழில்களில் ஈடுபடுவதெல்லாம் உழவன் தரும் உணவைப் பெறத்தான். உணவு கிடைத்தால்தான் பிற எந்தத் தொழிலும் நடைபெற முடியும்.

"உழவினர் கைம்மடங்கினில்லை விழைவதூஉம்
விட்டோமென்பார்க்கு நிலை".

தானம் மட்டுமல்ல, தவமாக இருந்தாலும் உணவு இல்லையென்றால் உலகு நடைபெற முடியாது என்கிறது குறள். ஆதலின், உலகம் உயிர்வாழ உணவு தேவை. அது உண்டாக உழவு தேவை. எனவேதான் வள்ளுவர் உழவே உலகென்னும் தேரோட அச்சாணியாகப் பயன்படுகிறது என்றார். மார்க்சு காலத்திற்கும் பிறகுகூட உலக நல்வாழ்வுக்கு வேண்டியவர் உழவரைவிட ஆலைத் தொழிலாளர்தான் என்ற முடிவு உண்டாகவில்லை.

மார்க்சு கொள்கை, அரசையும் செல்வரையும் எதிர்த்து தொடர்ந்து போரிட வேண்டியிருந்தது. அந்த போருக்கு உழவரைவிட ஆலைத் தொழிலாளர் தகுதி பெற்றார்களே தவிர, உலகு வாழ உணவு ஆக்கும் துறையில் உழவரே தலைமை பெற்றனர்.

பண்டைக் காலத்தே முரசு முழங்கியதும், ஏர்க்களம் விட்டு வந்து, நாட்டின் வைரிகள் வரும் திக்கு நோக்கி போர்க்களத்துக்குப் பல்வகை கருவிகளையும் தாங்கி வந்து நிற்பார்கள் உழவர்கள். ஆனால் மார்க்சு உழவர்களை விட்டுவிட்டாலும், போர்க்களத்தில் நேரிடையாக நுழைந்த லெனின் உழவரின் இன்றியமையாமையை நன்கு உணர்ந்தார். போர் அணியில் முன்னும் ஆக்கப் பணியில் பின்னும் அறைகூவி அழைத்து, தொழிலாளர் போன்றே, உழவரை முதன்மை உடையவராக்கினமை உலகறியும்.

மார்க்சின் கொள்கை மக்கள் பெருக்கம் "உலக வறுமைக்குக் காரணமாகக் காட்டப்படுவதை மறுக்கும்", மக்கள் உழைப்பால் வறுமையை வென்றுவிட முடியும். முதலாளித்துவ பிடிப்பு இல்லையென்றால்" என்று கூறும்.

ஆயினும் சில உண்மைகள் காலத்தாலும், அவ்வக் காலத்திய படிப்பினைகளாலும் மாறுபடலாம் அல்லவா?

அண்மையில் கூடிய உலகக் கழகம் உறுதி செய்த கணக்குப்படி இன்று (1854ல்) உலகோர் 250 கோடியாகும். சில ஆண்டுகள் இருந்து இன்றுவரை மக்கள் எண்ணிக்கைப் பெருகியுள்ள தன்மையில் இனியும் பெருகுமானல் 1980ல் 400 கோடியாகும். உலகில் உள்ள உணவு வளத்தின் வளர்ச்சியையும், மக்கள் வளரும் வளர்ச்சியையும் கணக்கிட்டுப் பார்த்தால் உணவு வளம், குறிப்பிட்ட ஒரு காலத்துக்குள் மக்கட்குப் போதமுடியாத நிலை வந்து சேரும் என்கின்றனர். நன்னம்பிக்கைப் பெருகி, போரும் பூசலும் இல்லையென்றால் ஆலைகளுக்கும் இயந்திரங்களுக்கும் இருக்கும் மதிப்பு குறையவே செய்யும். உணவின் உற்பத்தி ஏற்றமே பெறும். உணவு விரைவில் விளையக்கூடிய நிலை, உணவுப் பொருள் ஆக்க, இயந்திரங்கள் பயன்படும்நிலை தான் வருங்கால உலகு கொண்டாகவேண்டும். பொதுஉடமையானலும்கூட இந் நிலைதான் வந்து சேரும். எனவே கலப்பைப் பிடிக்கும் உழவரிடமிருந்து "டிராக்டர்" ஓட்டும் உழவனிடம் உழவுத் தொழில் மாறலாமேயொழிய உழவின் உயர்வு ஒழியாது. அதுவே யென்றும் உலகிற்கு ஆணி.

## வள்ளுவர் நெறி வளருமா?

மார்க்சு கண்ட வழி உலகின் ஒரு பகுதியைச் சிவப்பாக்கும் அளவு ஏழையரைத் தூண்டி உணர்வு கொள்ளச் செய்ததுபோல், குறளார் சொல் உலகில் பயன் பெற்றதுண்டோ? என்றால், பெரிதும் இல்லை என்றே சொல்லலாம். இன்றைய தமிழகத் தலைவர்களால், அறிவுச்சுடர்களால், போற்றப்படும் மெய் மொழியாம் திருக்குறள் பன்னெடுங்காலமாக இருளிலேயே கிடந்தது. அதை மங்கச் செய்யும் அளவில் வடவர் தம் கொள்கை தமிழகத்தே ஏற்றம் பெற்று உயர்ந்தது. பொன்னும், பொருளும், மண்ணும் பெண்ணும் உன்னை ஆட்டிப் படைக்க வந்த மாயை; வாழ்வை நம்பாதே, ஏழ்மை மாற்ற முடி

யாத தலைவிதியாகும், என்ற நம்பிக்கைகள் கடவுள் பெய ரால் புகுத்தப்பட்டு எல்லோராலும் நம்பப்படலாயின.

இந்த நம்பிக்கையைப் புகுத்த விரும்பியவர்களே, குற ளுக்கு உரை வரைந்தார்கள். தம் கருத்தையே குறள் கருத்தென்று திறமையாகவும் கூறி, நம்பவும் செய்து விட்டனர். குறள் வாழ்வு மலராமைக்கு இதுவும் ஒரு காரணமாகும். மார்க்சு வாழ்கிற காலத்து உதவவும், பின் அவரது கருத்தை விளக்கவும் ஏங்கல்சு இருந்தார். ஏங் கல்சு விட்டால் லெனின். லெனின் விடுவிக்காதவைகள் நடைமுறைகளைக் கண்டு பின்னவர் விளக்கிக் காட்டினர்.

வள்ளுவர் குறள் அவர் காலத்தோடு நின்றுவிட்டது. பின்னர் பல்வேறு மாறுபட்ட விளக்கங்கள் பெற நேர்ந்தது.

மார்க்சு தந்த நெறி மேலும் அவர் விட்ட இடத்தி லிருந்து வளர்ந்தது. லெனினும், ஸ்டாலினும் மார்க்கி சத்தின் வழியை மேலும் செப்பனிட்டார்கள். ஸ்டாலின் கட்டிக்காத்தார். மேலும் பரிமேலழகர்போல விளங்கவைத் தார் மார்க்சீயக்குறளை. இன்று குருசேவ் அந்த வழியைச் செப்பனிட இடையே நுழைந்தவைகளை மாற்றி புது முறை காண்கிறுர். மாசேதுங் சீனுவில் அவ்வழியை அமைத்து விட்டார். சீனுவும் ரஷ்யாவும், வேறுபல நாடுகளும் சிவப்பேறிய பின்னும்கூட, பொதுவுடைமை யென்றுல் ஒப்பாதவர்களை, நம்பாதவர்களை இன்றும் காண முடிகிறபோது அந்த அளவு வளர, வாய்ப்பற்ற வள்ளுவர் ஒளி, ஏன் தமிழகத்தே நேற்றுவரை விளங்கவில்லை யென்று கூறவா வேண்டும்?

வள்ளுவர் தன் காலத்தே உழைப்பாளரைக் கொண்டு ஏற்றத் தாழ்வை நீக்கிவிட எண்ணியிருந்தாலும், அது வெற்றிபெற்றிருக்க முடியாது. முறையே பண்ணை வளர்ச்சி, தொழில் வளர்ச்சியாகி வளர்ந்து, அது காரணமாக, வள்ளுவர் ஏழையைத் தூண்டவில்லை யென் ருலும் பசி, அவனை தூண்டிக் கொண்டேயிருந்தது. பசி தான் அவனைப் பத்தும் செய்யச் செய்யுமே! அதைவிட வள்ளுவர் என்ன செய்ய முடியும். மனமும், அறிவும்,

ஏழையைத் தூண்டவில்லையென்றாலும், பசி குமுறும் உள்ளத்தை உண்டாக்கவே செய்தது. குமுறலால் தீட்டப்படும் திட்டங்கள் பல இடங்களிலும் வெற்றிக்குப் பின் தந்த விளைவு மகிழ்ச்சியுறத்தக்கதல்ல. வயிற்றின் கொடுமைக்கே வாழ்நாளெல்லாம் போராடும் அவர்களுக்கு அன்று அறிவைப் பெருக்கிக்கொள்ளும் வாய்ப்பு ஏது ?

செல்வர் பொழுதைப் போக்க, புதுப் புது முறைகள் வேண்டியிருக்கின்றன. இல்லையென்றால், பொழுது போவதில்லை. ஏழைக்குப் பசி பற்றியெரியத் தொடங்கி விட்டால், மணி நேரமானாலும் மாபெரும் ஊழியாகவே தோன்றுகிறது. வயிற்றுத் தீ தணிந்தால் மறுவேளை உணவிக்கு உழைப்பை அவன் நாடி ஓட நேரிடுகிறது.

செல்வர் உலக இன்பங்களைக் கண்டு கொள்ளவும், ஏழை உழைக்கவுமே சூழ்நிலை உள்ளது. இந்த மாறுபட்ட தன்மைகள் மாறி, ஒன்றுபட இருவரும் ஒப்புநிலையடையவேண்டும். உரிமை, உழைப்பு, நுகர்வு, தேவை இவைகள் எல்லோர்க்கும் ஒப்பாகக் கிடைக்க வழிகள் இரண்டு. ஒன்று செல்வர் தாழவேண்டும். அல்லது ஏழை ஏறவேண்டும். வேறு முறையில் சொன்னால் செல்வரைத் தாழ்த்துவோம். ஏழைக்கே இனி ஏற்றமெல்லாம் என்பதுதான். இந்த இரண்டில் ஒன்று உலகில் நாளும் நடைபெறவே செய்கிறது. இனியும் இது நடக்கத்தான் வேண்டியிருக்கிறது; நாடு நல்வாழ்வு பெற.

பண வீக்கம், பொருள் மந்தம் இவைகள் நாட்டில் ஏற்படாமல் காக்க "மூலதனம்" ஒரே இடத்தில் குவிந்து விடாமல் தடுக்க வேண்டியது, அரசியலாரின் கடமையாகிறது. முதலாளிகளின் ஆட்சியாயினும், தொழிலாட்சியாயினும், பொதுவுடைமை ஆட்சியாயினும், ஆட்சி முறை எதுவாயினும் மக்கள் நல் வாழ்விற்காக பொருள் தேக்கம் நீக்கப்பட்டே ஆளப்படுகிறது. இன்று மூலதனம் விரைவில் பெருகுவது ஆலை அரசர்களிடம். ஆதலினால் நிறைய (லாபம்) ஆக்கம் அடைகிறவர்களுக்கு அரசியலார் (Super Tax) மேல்வரி விதித்துள்ளார்கள். அவர்கள் பெறும் ஆக்கத்தில் ரூபாய்க்குப் பதின்மூன்று

அணு வரியென்று வாங்கிய பின்னரும் கூட, பல கோடி அவர்கள் பெட்டிகளில் சென்று முடங்குகிறது.

மூலதனத்தைப் பெருக்குபவர் நல்ல இயல்பின ரானல், ஏழை எளியவரைக் காக்க, தன் பெருக்கத்திற்குக் காரணமாயிருந்த தொழிலாளர்களுக்கு உழைப்புக்கேற்ற கூலியும், உறையுளும், மருத்துவ உதவியும், தொழிலில் பெறும் கொள்ளை ஊதியத்தில் முறையான பங்கும் அளிக்க முன் வருவார்கள். இவ்வகையில் ஆலையரசகள் மார்க்சு காலம் வரை, முன்வந்து நடந்துள்ளார்கள் என்று கூறமுடியாது. ஆகவேதான் மார்க்சு,முதலாளியின் பேராசை, அவன் திரட்டும் பொருளை நாட்டிற்கு நன்மை செய்யவிடாது என்று கண்டார். தன் வாழ்விற்கு வேண்டிய அளவு மட்டும் ஒருவன் பொருள் திரட்டினல் அது அவ்வளவு தீங்கு இல்லை. ஆனல், மதிப்பே நோக்கமாகக் கொண்டு பெருங் கொள்ளையைத் தொழில் துறையில் போட்டியிட்டு நடத்துவார்களேயானல், அது நாட்டின் நல் வாழ்விற்கு வைக்கப்படும் கொள்ளியே யாகும். எனவே, மூததனத்தின் மூலவர்களின் தன்னல நோக்கை ஒழிக்கத் தொழிலாளரே அந்த ஆக்கத்திற்கு உரியவர்களாக வேண்டும் என்று கருதினர் மார்க்சு.

உண்மை, இன்னது என்று கண்டால் மட்டும் போதுமா? இந்த உண்மையைச் சொல்ல, செயற்படுத்த வழி வகைகளை எண்ணினர். அவர் கண்ட தொழிலரசு நிலைக்க வேண்டுமானல், அதை அரசு முன்னின்று செய்ய வேண்டும். ஆனல், அரசு செல்வர்களின் செல் வாக்கின் பக்கமே என்றும் நின்றது. ஆதலின் செல் வரைக் காக்கவே அரசு முற்பட்டது. அது, ஏழை - செல் வரிடையே நிலவிய வேறுபாட்டைத் தீர்க்கக் கிளம்பி, என்றும் செல்வர் பக்கம் சார்ந்ததாகவே நின்றது. செல் வர்களைக் காப்பாற்றிச் செல்வத்தையும் காப்பாற்ற, நீதிகளை-மதங்களும்,சட்டங்களை-அரசாங்கமும் ஏற்படுத்தி வைத்து ஆண்டன. ஆதலின், இன்றைய நீதி, ஆட்சி அமைப்புஅனைத்தும் செல்வர்க்குச் சார்பாக, தொழிலாளி யின் ஏற்றத்திற்கு மாருக, முரணுக அமைக்கப்பட்டுள் ளன என்று கண்டார். அரசின் அடிப்படையே, வேறுபட்ட

வகுப்புகளிடையே நட்பை உண்டாக்குவதன் மூலம் வேறு பாட்டைக் காப்பதாகவே இருந்திருப்பதையும் கண்டார். எனவேதான் வர்க்கமற்ற சமுதாயத்தில், அதாவது தொழிலாளி முதலாளி அற்றுப்போன நிலையில் ஆட்சி தேவையில்லை என்று கூற நேரிட்டது. எனவே அனைத்தையும் மாற்றினால்தான் தொழிலாளர் வாழ்வு மலர முடியும் என்றார். செல்வரை இறக்கி, தொழிலாளரே ஆட்சியைக் கைப்பற்ற வழிவகைகளைக் கண்டார்.

வள்ளுவர் அன்று செல்வரைத் திருத்த முடியும் என்று நம்பினார். மக்கட் பண்புகளாவன அன்பு, அருள், நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை, இவை யாவும் அன்றும் இன்றும் ஒன்றுதான். ஆனால், சூழ்நிலை மாறிவிட்டது. வள்ளுவர் காலத்து கல்நெஞ்சன், இன்று கொடையாளி என்று பெயர் பெற்றுவிட முடியும். வள்ளுவர் கண்ட வன்நெஞ்சு மாற்ற முடியும் என்ற நம்பிக்கையுடையதாக இருந்தது.

அன்றைய மூலதனம் நிலம். நம்நாடே உழவர் நாடு. சுரக்கும் பொருளெல்லாம் விளைபொருள். உழைப்போர் மதிப்புடன் வாழ்ந்தனர்.

மக்கட் கூட்டம் குறைவாகையால், இயற்கை யளித்த பொருள் போதுமானதாக இருந்தது. எனினும் சில வேளைகளில் கடும்போர், பெருவெள்ளம், மழையின்மை, கொடும் நோய், இவைகளால் பஞ்சம் ஏற்பட்டது. அதை ஒட்டி பஞ்சையர் ஏற்பட்டனர். சிலர்பால் செல்வம் களஞ்சியங்களாக நின்றன. இவ்வகைச் செல்வரும் குந்தித் தின்றால் குன்றும் மாளும்" என்ற பழமொழியை உணர்ந்திருந்தனர்.

நிலம் பழங் கலப்பை கொண்டே உழப்பட்டது. வருமானமும் ஓரளவிலேயே நின்றது. வேலையை எளிதாக்க ஆலையரசுகள் புதுக் கருவிகளைக் கண்டதுபோல் கண்டு ஆட்குறைப்பு செய்ய வழி இல்லை. ஏழை எளியவரைக் காத்தல், பிறர்க்கு அளித்து வாழ்தல் ஆகிய நல்ல பண்புகளும் பெற்று விளங்கினர் செல்வர்.

அறிவு நலம்பெற வாய்ப்பிலாதிருந்த,உழவர் போன்ற தொழிலாளரினும், நலஞ்சான்ற செல்வரைத் திருத்துதல், எளிதென எண்ணிச் செல்வரைத் திருத்த முற்பட்டார் என்றே எண்ணவேண்டியுள்ளது. வள்ளுவர் செல்வத்தின் தன்மை, அதைச் சேர்ப்போரின் நிலை அனைத்தையும் ஆராய்ந்து, அவை பயன்பட வழி காட்டுகிறார். வள்ளுவரால் வழிக்குக் கொண்டுவரப்படும் செல்வர் என்போர், தனக்கு வேண்டிய உணவுடன், பிறர்க்கு உதவக்கூடிய பொருள் பெற்றிருந்தார் என்றே பொருள். நிலம் கால்காணியுளவானாலும் அல்லது ஆயிரம் வேலி நிலமானாலும், தன் தேவைக்குமேல் பெற்றிருந்தவர் எல்லாம் செல்வரே. "ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது ஊதியமில்லை உயிர்க்கு". —குறள்.

மிஞ்சம் பொருள்பெற்ற அவர்களைத் துறவியர்க்கும், ஏழையர்க்கும், இறந்தார்க்கும் துணையாக இரு என்றார். விருந்தையும் சுற்றத்தையும் காத்தல் தலையாய கடனென வற்புறுத்தினார். தேடிவந்த விருந்தைப் பசியெடு வாயிலிலே விட்டு, தான் மட்டும் உள்ளே உண்ணக்கூடாது என்றார். தான் உண்பது சாவாமருந்தாக இருந்தாலும் தனியேபிழைத்திருந்து என்னபயன்? அதையும் பகிர்ந்து கொடுத்து வாழ்; என்றார்.

நாளும் பொருள் ஈட்டும் செல்வர்க்கு, அப் பொருள் வைத்தற்குரிய நல்ல இடம், ஏழையின் வயிறு. பசித்த வயிற்றை நிறைவு செய்தல் என்றும் நிலைத்த புகழைத் தரும். நிறையப் பொருள் இருக்கிறது, பலன் என்ன? கோடி கோடியாகக் குவிந்திருந்தாலும் செல்வம் தரும் பலன் சிறப்புதானே. கோடிக்கணக்கில் குவித்தவர்கள் பலருண்டு உலகில். அவர் பெயர் என்றாவது எங்காவது இறந்தபின் நிலைத்ததா?

"கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண்டாயினும் இல்"

என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். ஆதலின் சேர்த்து குவித்ததைத் தன்உள்ளமும், பெறுகிற ஏழையின் உள்ளமும் மகிழும் வண்ணம் அளிக்கவேண்டும். பெற்றவர்

செல்லுமிடந்தோறும் அளித்தோர் புகழை வாய்பறையாக அறைவார்கள். செல்வம் இருக்கும்போதும், அதைக் காக்கும்போதும் தூக்கமின்றி சுமைதாங்கி போல வாழ நேரிடுகிறது. அளித்து வாழ்ந்தால் புகழ் மட்டுமல்ல. அளிக்கின்ற போதும், பெறுபவர் காட்டும் நன்றியைக் காணும் போதும், பிறர் துன்பம் துடைத்தோம் என்று எண்ணும் போதும் இன்பம்; ஈத்து உவக்கும் இன்பம். அறியாதவர்கள் பொருளைக் காத்து, இன்பத்தை இழந்து விடுகிறார்கள். தம்மை நம்பி வருகிறவர்கள், பசியென வருந்துகிறவர்கள் இவர்களைக் கண்டு கல்லென நிற்கின் றார் வன்கண்ணவர். அவர்களுக்கும் உள்ளம் ஒன்று உள்ளதாகுமோ? உள்ளம் அன்பு சுரக்கும் இடம். அன்பற்ற உயிர் உண்டா? இல்லை. விலங்குகளிடம்கூட அன்பைக் காணுகிறோமே. தோற்றத்தால் மனிதனாகவே காணப்படும் ஒருவனிடம் எவ்வாறு அன்பு இல்லாதிருக்க முடியும். வள்ளுவர் அன்பற்ற உடம்பு ஒன்று உண்டு; அது பிணம் என்றார். அது எலும்பு தோலால் போர்த் தியது. மக்களுக்கும் இதற்கும் உள்ள வேறுபாடு என்ன? தோற்றத்தளவில் ஒன்றுதான். உயிருடையார் அன்புடையார். இது உயிரற்ற பிணம். இதற்கு அன் பில்லை. அன்பு வழிவது உயிருடையது. அன்பற்றது என்பு தோல் போர்த்திய உடம்பு — பிணம். உயிருடைய வர்தான் வன்கண்ணர். அவரிடமும் அன்பு இருக்கிறது. வற்றிய குளத்தில் கொட்டியும் ஆம்பலும், தம் கிழங் குகளைச் சேற்றில் புதைத்துக் கொண்டு காண்பவர் கண்ணிற்குப் புலப்படாமை போல, மறைந்து கிடக்கிறது. தம்மிடம் உள்ள அன்பை மறைத்துள்ளார்கள். அந்த மறைப்பு விலக வேண்டும். அன்பு வளர வேண்டும். வெப்பத்தால் இறுகிப் பாறைபோல் இருக்கும் பாளங்கள் நீர் ஊறுமானால் பிளவுபடும். மனமும் அதுபோல் இள கும். அதற்கு அன்பு என்னும் அருவி கிளம்ப வேண்டும் என்கிறார்.

வீட்டுத் தலைவன் மீது வைத்த நன்றியுணர்வா லும், இயல்பாலும், அயலவர் அருகே வரவிடாது காக்கும் நாய்போல, பேராசை, தன்னலம், மிகுவேட்கை முதலிய

வற்றின் அடிமைகளாய்ஆகி உலவுகிறவர்கள் உண்டு. உள்ளத்தைச் செல்வத்தே புதைத்து விட்ட அவர் உலவிப் பயன் என்ன? உடலில் தென்றல்படுகிறது. தெளிவும் இன்பமும் பிறக்கவேண்டாமா? உள்ளத்தைப் பண நோக்கு மூடிவிட்ட பிறகு பிணத்துக்குத் தென்றலைத் துய்க்க உணர்வு ஏது? உடல் தென்றலிலே மூழ்கிற்றே தவிர தென்றலைத் துய்க்கவில்லை. உள்ளம் செல்வத்தை மேலும் குவிக்க என்னென்ன செய்ய வேண்டும் என்னும் இருட்டறையில் காற்றின்றி உழல்கிறது. இத்தகைய இயல்புடையவர் தாம் செல்வர் என்பதை உணராதவரல்லர் வள்ளுவர்.

"ஈட்டம் இவறி இசை வேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை" என்றதால்

செல்வர் உலகிற்கு வீண்சுமையாக வாய்த்தவர்கள் என்று கூறியவர் வள்ளுவர். எனினும் வள்ளுவர் யாராயிருப்பினும் குறைபாட்டைத் திருத்த வேண்டும் என்று எண்ணுபவர். அறிவுபெறத் தகுதியுடையவர் யார் யார் என்று வகுத்துக்கொண்ட சிலர் போலவோ, சாதிக்கொரு நீதிவகுத்த மனு போன்றோ வகுத்தார் அல்லர். மேலும் குடியனையும் திருத்தும் திறம் பெற்றவரன்றோ வள்ளுவர். குழம்பிய உள்ளமும் தளர்ந்த நரம்பும் பெற்று மயங்கி விழும் குடியனைவிடத் தெளிவற்றவரா செல்வர். மனத்தைப் பணத்தே புதைத்துவிட்ட செல்வர் உள்ளம் உணர்ந்து அடிக்கும் கொள்ளையே அவரைச் செல்வராக்குகிறது என்பர் மார்க்சு.

செல்வம் விளைவிப்பது ஒரு குற்றமா? இல்லை இல்லை."பொருள் என்னும் பொய்யாவிளக்கு" என்று கூறியுள்ளார். வள்ளுவரும் மார்க்சும் பொருள் பெருக்கத்தையே விரும்புகின்றனர் – ஆனால்,தனி உடைமை ஆவதைத்தான் எதிர்க்கின்றனர். வள்ளுவர் செல்வம் பெருகுதற்குக் காரணமாய் விளங்குகிறவர்களைப் பல்வகையிலும் ஊக்கவே செய்கிறார். தான் அவர்களை மிகச்சிறந்தவர் என்றோ, உயர்ந்தவர் என்றோ கருதாவிட்டாலும் உலக இயல்பை அவர்களுக்கு நினைவு ஊட்டி,

"இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை,
எல்லாரும் செய்வர் சிறப்பு". (752).

என்று கூறி மேலும் ஒரு பொருளாக மதிக்கப்படாத வரைக்கூட (அற்பரை) பொருள் மதிக்கப்படும் தகுதியுடையவராகச் செய்துவிடுகிறது என்று பொருளின் ஏற்றத்தைக் கூறியுள்ளார். உலகோர் செல்வரை மதித்து மயங்குகிறார்கள் என்றே காட்டுகிறார். ஆனால் அவர் செல்வரைப் புகழ்வதாகக் குறள் அமையவில்லை.

செல்வத்தை எவ்வழியிலேனும் சேர்த்து விடுங்கள் என்று கூறுவதாகக் கொள்ளக் கூடாது. செல்வர் சேர்க்கும் பொருள் அனைத்தும் ஏழையின் உழைப்பே. அந்த உழைப்பின் சுரண்டல்தான் செல்வத்தின் பெருக்கமும் லாபமும் என்று மார்க்சு கூறுவதுபோல, வள்ளுவர் நேரிடையாக குறிப்பிடவில்லை. வள்ளுவர் கருத்தும் மாக்சுக்கு முரணாக அமைந்திருக்கவில்லை. ஓரளவு உடன்பாடாக இருக்கிறது. அன்பு காரணமாக வராத பொருள் இழிந்தவரது ஆகட்டும் என்கிறார்.

வள்ளுவர் காலத்தே மாக்சு கூறியதுபோல, தனிமுதல், பொது உடைமை என்று பிரித்துக்காண முடியவில்லை. பொதுஉடைமை அரசாங்கமே உடமையனைத்தையும் எடுத்துக்கொண்டு, மக்களுக்கு எது எது எவ்வளவு தேவையென வரையறுத்து உற்பத்தி செய்கிறது இன்று. இவைகளுக்குப் போதிய புள்ளி விபரம் கிடைப்பதுபோல் வள்ளுவர் காலத்தில் புள்ளி விவரங்களைப்பெற முடியுமா? அன்று உடைமை அனைத்தும் பொது - என்று தோன்றவில்லை. ஓரளவு அரசன் பொதுமக்கள் வருவாய் உடையவனாயிருந்தான். போதிய புள்ளிக்குறிப்புகளும் இருந்து, பொது உடைமை எண்ணம் இருந்திருப்பின் அரசின் கடமையாக கூறிய சில குறள்கள் மிகுந்திருக்லாம். வள்ளுவரும் உடைமையைப் பொதுவாக்கப் பங்கிடப்படுதலையும், உழைப்பை ஊக்குவதையும் பெரிதும் விரும்புகிறார்.

இன்றைய உலகு - தொழிற் கொள்ளை, வாணிபக் கொள்ளை இவைகளோடு கருஞ்சந்தை முதலியவைகளை யும் பெற்றுள்ளது. மன்னன் ஆட்சியானாலும், வணிகன் வாணிபமானாலும், உழவனின் விளைவானாலும் அனைத்தும் பிறர் வாழச் செய்யப்படும் தொண்டாகவே வள்ளுவர் கருதினார். புள்ளிக் கணக்கும், பொருளியல் தெளிவும் உடமை பொதுவாக்க மிக இன்றியமையாதது. அது இல் லாத காலத்து, அனைவரையும் உழைக்கச்செய்து, அதன் பயனைத் தான்மட்டுமே துய்க்கும் எண்ணம் அற்றவர் களாகச் செய்வதுதான் சிறந்தது. ஆதலின் ஈட்டுவோ ரிடம்

"தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு" என்கிறார்.

முயற்சிசெய்து பாடுபட்டு உழைப்பது, உழைப்பவர் அடையும் பயனனைத்தும் தேவைப்படுபவர்களுக்கு உதவ வேயாகும். இயற்றலும் ஈட்டலும் காத்தலும் ஆகிய முத் தொழிலோடு காத்தவற்றை அனைவர்க்கும் வகுத்துக் கொடுத்தலும் மன்னன் தொழிலாகும். கள்வன் வேலொடு நின்று வழிப் போவோரை அடிக்கும் கொள்ளைபோல கோலோடு நின்று மிகு வரி வாங்கக் கூடாது என்றார் மன்னரை. தம்முடைய பொருளை ஒருவன் எவ்வாறு கருதுகிறானோ, அதேபோல் பிறனுடைய பொருளையும் கருதி செய்கின்ற பண்டமாற்றுதான் வாணிகம் என்றார். இவ்வாறாகத் தொண்டு செய்தலையே பல்வேறு தொழிலா கக் கூறியுள்ளார். பொதுவுடமை ஆட்சியின்கீழ், மக்கள் அரசின் மீது வைத்த பற்றின் காரணமாகவும், தங்கள் பொருளியல் வாழ்வுக்கும் அரசே காரணம் என்ற உணர் வின் காரணமாகவும், பொருள் முயற்சியில் ஈடுபட்டு வெற்றி காணுகின்றனர்.

# 5. "வாழ்வுக்கு வகுத்த குறிக்கோள்"

வள்ளுவர் ஆட்சியையோ, கொள்கையையோ கூறி வற்புறுத்தவில்லை. மனிதனின் கடமையே பிறர் வாழத் தான் வாழ்வது என்றே கருதுகிறார். ஆதலின் உலகு வாழ ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளைச் செய்ய வேண்டும் என்றே வற்புறுத்துகிறார்.

ஒவ்வொருவரின் கடமையும் உலகைப் பேணுவது தான் என்றால், தன்னலத்திற்கும் சுரண்டலுக்கும் அறவே வழியில்லை. ஒவ்வொருவரும் தாம் பயன்பட வேண்டும் என்று எண்ணுவரேல் தாம் ஈட்டிய பொருள் அனைத்தையும் வறியார்க்கும் மற்றவர்களுக்கும் அளித்தல் வேண்டும். எச்சமாக இருக்கத்தக்கது (சொத்தல்ல) பண்புள்ள பிள்ளைகளே. வளர்ந்து விளங்கி தோன்ற வேண்டியது புகழே என்றார். இவ்வாறே பலவிடங்களி லும் கூறும் வள்ளுவர், மீதியாக பொருள் வையுங்கள் — என்றோ வைக்க வேண்டியது செல்வம் தான் என்றோ எந்த இடத்திலும் கூறவில்லை. ஆதலின் ஈட்டிய பொருளை முடக்காமல் உலகுக்களித்து வாழவேண்டும். "உழைப்புக்கேற்ற ஊதியம்தான்" சோஷியலிசம் பரவி நிற்கும் நிலையில் பொதுஉடைமை நாடுகளில் கிடைக் கிறது. வள்ளுவர் தேவை எவ்வளவு உண்டோ அவ்வள விற்கு ஊதியம் கிடைக்க வேண்டுமென்கிறார். தேவைக் கேற்ற அளவு ஊதியம் கிடைக்குமானால் அதை சோஷிய லிச வளர்ச்சி பழுத்து விளைந்த கம்யூனிச நிலை என்பர்.

முன்னரே கூறியதுபோல் பொருள் வரையரையை வள்ளுவரிடம் புள்ளிக் கணக்குகளோடு காண முடியா தென்றாலும் அவர்காட்டும் உவமையே அவர்எண்ணத்தை நமக்கு நன்கு விளக்குகிறது. ஊரெல்லாம், உண்ணும் நீர் இன்றித் தவிக்கிறார்கள். நல்ல கோடை. அந்த நேரத்தில் ஊருணி எவ்வளவு தொலைவிலிருந்தாலும் சென்று தண்ணீர் கொண்டு வருவதை வரண்ட பகுதி களில் கோடை தோறும் காணலாம். தொலைவான இடஞ் சென்றாலும் நீர் ஊருணியின் அடியில் வற்றிக் கிடக்கும். பானை தரையில் தட்டுவதால் விரைவில் மொள்ளவும் முடியாது. இது இயற்கையால் ஏற்படும் இன்னல். இது போல் பொருளற்று பஞ்சம் ஏற்பட்ட காலத்து மக்கள் பலர் தம் வயிற்றை நிறைவு செய்ய கால் வயிற்றுக் கஞ்சி

யேனும் ஊற்றுவார் யாரெனக், கால் கடுக்க நடப்ப துண்டு. ஊரின் உள்ளேயே ஓர் ஊருணி. அது ஊர்க் கோடியிலன்றி ஊர் நடுவே அமைத்தது. உப்பு கரிப் பின்றி உண்ணும் நீராய் விளங்குகிறது. பாசி படராமல் தூயதாயும் இருக்கிறது. வற்றியல்லாது நிறைந்து நின்று, வேண்டுவார் வேண்டிய அளவு பெறும் வண்ணம் ஊறக்கூடியதாய் அமைந்திருப்பின் எப்படிப்பயன்படுமோ அப்படி பயன்படும் பண்புடையாளன் செல்வம் என்று கூறுகிருர். வறுமையாளன் பண்புடையாளனின் செல் வத்தை எளிதில் பெறவும், அச்செல்வம் அவன் வறுமை யைத் தணிக்கவும் பயன்படும் என்பதைச் சுட்டுகிருர். இது போன்று பிறர் தேவையறிந்து அளிக்கும் தன்மை யும் செல்வம் குறைபட்டு ஏழையாகினும் வழங்கும் வள்ளல் தன்மை உடையவரை ஒப்பவர் யார்? உள்ளூரின் கண் பொதுவில்உள்ள பழமரம் பழுத்தளிப்பது போலவும், தன் எல்லாப் பகுதிகளும் மருந்தாகப் பயன்படும் மரம் போலவும் பண்புடையாளர் செல்வம் பயன்படும் என்று குறிப்பிடுகின்ருர்.

செல்வம் எடுக்க எடுக்கக் குறையும். புகழ் கொடுக்கக் கொடுக்க நிறையும். பொருள் உள்ளபோது புகழ்கின்ற மக்கள், இல்லாதபோது இகழ்வர் என்று கூறுகின்ற வள்ளுவர் பொருளே இழந்து விடாதே என்று ஏன்கூற வில்லே? அதுதான் கூறவில்லே யென்ருலும் பொருளே இழக்கும் வண்ணம் மேலும் மேலும் அளிப்பதை வற் புறுத்துகிருர். இதன் பொருள் என்ன? பொருளில்லார்க் கிவ்வுலக மில்லே யென்ற பொன்னுரையை மறந்தனரா என்ருல் இல்லே, ஒருக்காலும் மறந்தாரில்லே. தனி மனிதன் வாழ்வைக் கண்டதுபோல் சமுதாய வாழ்வின் அடிப்படையையும் உணர்ந்திருந்தார்; மார்க்சு பல்லாயிரம் ஆண்டுகளிக்குப்பின் கண்ட உண்மையின் அடிப்படை வள்ளுவர் கருத்திலே அன்றே கருக் கொண்டிருந்தது.

## வேறுபாட்டில் கண்ட ஒருமைப்பாடு

உலகியலில் மூலதனம் மேலும்மேலும் பெருக ஏழை யின் உழைப்பு சுரண்டப்படுகிறது. மூலதனம் பெருகப்

பெருக ஏழைத் தொழிலாளர் தொகையும் பெருகும் என்ற உண்மையை மார்க்சு அறிவித்துள்ளார்.

தனி வாழ்வில் பொருள் சேர்ப்பது அவனவன் நன்மைக்கு அரணுகிற காரணத்தால்தான், இன்றளவும் தன்னலமும் தனியுடைமையும் ஓங்கி நிற்கின்றன. அதனால் மக்கள் சமுதாயத்திற்குத் தனியுடைமை தீங்கையே தருகின்றது. செல்வர் பொருளை அளிப்பது இன்றியமையாததாக்குகிறது. ஆதலின், ஊருணி ஊராருக்கு மேலும் மேலும் சுரப்பதுபோல ,பழமரம் தன்மீது கல் பட்டாலும் தான் கனிகளைத் தருவதுபோல, மருந்துக்கு மரத்தின் எல்லாப் பகுதியும் பயன் தருவதுபோல, கொடுக்கும் தன்மைக்குச் செல்வரைத் தூண்டுகிறார். ஈவோர்க்குநிற்பது புகழ்தான். ஆனால், பயன் கருதிச்செய்வது ஈகையாகாது. ஈகைவருவாய்க்கு ஏற்ப என்பதை

ஆற்றின் அளவறிந்தீக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி. — என்றார்.

வள்ளுவர் கண்ட வழியில் செல்வம் அளிக்கப்படுமேல், செல்வர், நாளும் பொருள் ஈட்டும் ஊக்கம் கொண்டு விளங்குவர்.

இன்மை யெருவர்க்கு இளிவன்று சால்பென்னும்
திண்மையுண்டாகப் பெரின்.

ஆதலின், நிலையாக செல்வத்தினை முடக்குவோர் சமுதாயத்தின் அழுக்குகள். அழுக்குநிலை முற்றி முடைநாற்றமெடுப்பதும், முடைநாற்றம் மிகுந்து சமுகத்தை நோய்க்கு ஆளாக்குவதும் இயல்பு. சமுதாயத்திலும், செல்வத்தை முடக்குவோர்களால் இந் நோய் முறையே வளர்ந்துள்ளது. வள்ளுவர் காலத்தே நோயின் தொடக்கம் காணப்பெற்றது. சமுதாயத்தே சிலர் வாழவும், பலர் வாடவும் உள்ள இந்நோயை வள்ளுவர்கண்டார். அழுக்கு சேர்ந்த பொழுதோ, முடைநாற்றத்தின் தொடக்கத்தோ வள்ளுவர் இல்லை.

மனிதன் முழு உரிமையோடு பிறக்கின்றான். உலகப் பொருள்களும் யார் யாருக்கு என்று வகைப்படுத்திப் படைக்கப்பட்டனவல்ல. உலக மக்களுக்காகவே உலகில் பொருள்கள் உள்ளன. வஞ்சகர் சிலர் முளைத்தனர், சாதியும் மதமும் புகுத்தி தாம் உழையாதுவாழக் கற்றனர். வலிமை கொண்ட சிலர், எளியவர் தமக்கே உழைக்க வேண்டுமென்றனர். வஞ்சகரும் வலியவரும் சேர்ந்து தம்மைக் காப்பதற்கு ஏற்றவாறு நீதிவகுத்தார்கள். அந்த நீதியின் அடிப்படையில் சட்டம், நீதிமன்றம், சிறை ஆகியவை அமைக்கப்பட்டு செல்வரின் சுரண்டல் குற்றமற்றதாக்கப்பட்டு, எளியோர்க்கு மீளமுடியாத இழிநிலை ஏற்பட்டு விட்டது. வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்ற கொள்கையை நல் அறிவாளர் கண்டித்தே வந்தனர். எனினும், ஏற்றமும் தாழ்வும் மக்களிடையே நோயாய் நீக்கமுடியாதவாறு வளர்ந்துநின்றன. வள்ளுவர் காலத்தில் துளிர்விடும் செடியாக நின்றது என்றால் மார்க்சு காலத்தில் மரமாக ஓங்கி வளர்ந்துவிட்டது. இன்று அம் மரம் முற்றி சில கிளைகள் பட்டுவிட்டன. பட்ட கிளைகள் சிவப்பேறிவிட்டன.

வள்ளுவர் வளரும் செடியினைத்தான் காண முடிந்தது. அவர் முளைக்கவிடக்கூடாது என்று சொல்ல வழியில்லை. அது அவருக்கு முன்னே முளைத்துவிட்டது. எனவே அதன் நச்சுத் தன்மையை எடுத்துக்காட்டி அதன் வளர்ச்சியைத் தடுக்க வேண்டுமென்றார்.

மார்க்சு காலத்தே அதுமரமாக வளர்ந்து விட்டது. லெனின் காலத்தேதான் அந்த மரம் கிளைகிளையாகப் பட்டு விழும் நிலை ஏற்பட்டது.

ஏழையும் பணக்காரனும் அற்ற நிலையைதான் கிளைகள் பட்டதாகக் கூறப்படுவது. இந் நிலைக்கு ஏழை முயலுகிற போதெல்லாம் கொடுமை தலையெடுக்கிறது. அதைச் செல்வன் தொடங்குகிறபோது அருள் தளிர்க்கிறது. ஏழைக்குத் தன்நிலை ஏற்றம் பெறும் என்றால் இன்பமாகவே இருக்கும். இன்பத்தின் எல்லையை அடைய எல்லோரும் விரும்புகிறார்கள். எப்படியாவது

பொருளை அடைவோம் என்றுதானே எண்ணுவான். செல்வனை அழுத்தி ஏழை ஏறுவதைவிட, செல்வன் இறங்கி வந்து அமைதியாக சூழ்நிலையை மாற்றி ஏழையை ஏற்றுவதே மேல் என்றார் வள்ளுவர்.

மார்க்சு ஏழையே உன்னை யாரும் ஏற்றிவிட மாட்டார்கள். நீதி, சட்டம், சிறை, இவை அனைத்தும் உனக்கு எதிராகவே உள்ளன. உன்னைக் காப்பதாக அருமையாகச் சொல்பவர்கள், உன் உழைப்பைப் பயன் படுத்திக் கொள்ளவே பொருள் அளிக்கிறார்கள், நீ என்றும் அவர்களுக்கு அடிமையாயிருப்பாய் என்று நினைத்து; எனவே நீ, நீயாக எழவேண்டும். நீயாக மாற்றாரை வீழ்த்த அரசியலைக் கைப்பற்ற வேண்டும் என்கிறார். இருவரிடையே ஏற்பட்ட இந்த மாறுபட்ட சொற்களுக்குக் காரணம் காலச்சூழ்நிலையே. இருந்த போதிலும் வள்ளுவர் சமுதாய வாழ்வை நோக்காது நுகரும் செல்வரை அன்றே இடித்துக் கூறியுள்ளது இன்றும் ஓர் வியப்பாகவே உள்ளது.

வள்ளுவர் செய்ததோ நீதி நூல்களோ யாரையும் இடித்துப் பேசாத பண்பு உடையன. வள்ளுவரோ இனிய சொற்களாலேயே திருத்த வேண்டும் என்பவர். பழங்காலத்தே செல்வரைச் சொன்னால் நா அறுந்து படும். தனிமனிதனைச் சொன்னாலே தப்பமுடியாதபோது செல்வரனைவரையும் அவர் வாழ்வு முறை தவறு என்பதற்காகத் திட்டவா முடியும்? வள்ளுவரும் தன் கருத்தை விளக்குவதில் இளைத்தவரல்லர்; உவமையாலே விளக்குகிறார்.

வாயிலிலே நிற்கும் தம்பியை அண்ணன் "என்னடா மரம்மாதிரி நிற்கிறாய். உள்ளே வா'' என்றால் மரம் என்கிறானே என்று தலைக்குமேல் சினம் கொள்வதைக் காணுகிறோம். வள்ளுவர் செல்வரை மரமென்கிறார்- மரத்திலே நல்லவையும் உண்டு. ஆதலின், முள்மரம் என்றார்; ஏழைக்கிரங்காத ஈரமற்றவர்களை. முள்மரமானாலும், வேலி ஓரத்திலிருந்தால் பயன்படும். இது ஊர் நடுவே தெருவில் உள்ளது. இளையதாயிருப்பின் பசுமை

யாகவேணும் தோற்றமளிக்கும். இதுவோ முற்றி பழுத்த மரம்; தன் பழங்களேயும் முள்ளேயும் உதிரவிடுகிறது. நடுவூருள் உதிரும் முள், போவார் வருவார் கால்களில் குத்துகிறது. முள் தானே வைத்தால் எடுத்து விடுவோம் என்று கருதினுலும் அது நச்சுத்தன்மையும் கொண்டு விளங்குகிறது. அதன் கனியைத் தின்ருலும், முள்பட்டாலும், அதன்மீதுபடும் காற்றில் தோய்ந்தாலும் மரம் ஊர் நடுவே இருப்பதால், ஊரார் வாழ்வு பாழாகிறது. மரமும் இளமரமல்ல. பழுத்தமரம். இனியும் தானே விழ வேண்டியது. இதை ஏன் வெட்டக்கூடாது? என்று தோன்றலாம் நமக்கு. வள்ளுவர், அரிவாளும் சுத்தியும் கொண்டவரல்ல, வெட்டச்சொல்ல. நடுவூருள் பழுத்த அந்த நச்சுமரம் - மரமல்ல. நாய் பெற்ற தெங்கம்பழம் போல் தனக்கும் பிறர்க்கும் பயன்படாது செல்வத்தைக் காத்து வருபவரைத்தான் அவ்வாறு கூறுகிருர்.

மார்க்சு அரிவாளும், சம்மட்டியும் அளித்து செல்கிருர். முற்றிய நச்சு மரத்தைத் திருத்த முடியாது என்பதும் உண்மை. புரட்சி நல்ல மரங்களேயும் வீழ்த்திவிடுவதை நாம் காண்கிருேம். எனவே தான் நச்சுமரம் காட்டுகிற அளவோடு வள்ளுவர் நின்றுவிடுகிருர். நாட்டின் நல்வாழ்வை நோக்கி, பாடம் கற்போர் ஆசான் கருத்தை அறியாமலிரார்கள். பன்னெடுங்காலமாக நீக்கமுடியாத நஞ்சு அதன்பால் இருக்கிறது. அதனே வீழ்த்த முற்பட்டு வீழ்ந்தவர் பலர். ஆதலினுற்ருன், அதனே வீழ்த்த, தனி வாக்கம் ஒன்றே அமைத்தார் மார்க்சு. நச்சுமரத்தை அரசையும், அது வளரத் துணையாகும் காற்றும் மழையுமான நீதியையுமே மாற்றவேண்டுமென்கிருர். வள்ளுவர் காலச் சூழ்நிலேதான் அவர் நேரடியாகத் தாக்காது விடக் காரணமாகும். வள்ளுவரோ மேலும்கொல்லாமையை வற்புறுத்தியவர்.

தனி வாழ்வில் பிறர்க்குத் தீங்கு அறவே செய்யக் கூடாது என்பார். ஆனுல், பொதுவாழ்வுக்கு அதே முறை உதவாமையை நன்கு உணர்ந்துள்ளார். அவரே பிறிதோரிடத்தில் முள் மரத்தை முற்றவிடக்கூடாது, அது தன்னே வெட்டுபவனே அது முட்களால் கிழிக்கும். ஆதலின் அதைச் சிறு செடியாக இருக்கும் போதே களேந்து எறிய வேண்டும் என்கிருர். வள்ளுவர்அதை வாழவிட வேண்டும் என்று கருதவே இல்லே. இட்டலிப்பானே

யில் உள்ள நீர் சூடேறிக்கொண்டு இருக்கிறது. ஆவி சில வேளைகளில் இடுக்குகளின் வழியாக வருதல்போல் செல்வர் சிலர் அளித்த கொடை, புரட்சியைத் தணித்தது. மார்க்சு காலத்தோ நீர் பெரிதும் ஆவியாக இருந்தது. மூடி லெனின் காலத்தே தூக்கி எறியப்பட்டது. கொதி நிலை காலத்தே வாழ்ந்த வள்ளுவர் புரட்சிப் பொன் மொழிகளை வீசவில்லை யென்றாலும் வெப்ப மொழிகளை வழங்கியேயுள்ளார். அவர் தன்னுடைய கைமுட்டியைக் காட்டி அச்சுறுத்தவில்லையே தவிர,

> "ஈங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
> கூன்கையர் அல்லாதவர்க்கு"

என்பதன்மூலம், பிறர்க்கும் தனக்கும் பயன்படாத செல்வம் குற்றமானது. கன்னத்திலறைந்து கொள்ளை கொள்பவர்க்கே அந்தக் கயவர் பொருள் கிடைக்கும் என்றார்.

தனி வாழ்வால் பொதுவாழ்வு கெடுகிறது என்றால் வயலில் உள்ள களைகளைப் பிடுங்குதல்போல் தீங்கை அகற்றிவிடவேண்டும் என்றார். வள்ளுவர் காட்டியது புரட்சியை அல்ல, புதுவாழ்வை. அவர் காட்டிய நெறியும் சூழ்நிலையும் அவர் காலத்தோடு மறையவில்லை. அந்தச் சூழ்நிலை மாறாமல் வளர்ந்தும்உள்ளது. மார்க்சு வளர்ந்து நின்ற சூழ்நிலையை நுணுகி நோக்கி, கொடுமைமிக்க வழியின்றி வேறு வழியில்லை யென்று எண்ணியபோதுதான், உலகின் நன்மைக்காகக் கருதிய வழியைத் துணிவாக வெளியிட்டார். வளர்ந்துநிற்கும் சூழ்நிலையை வள்ளுவர் காண நேரிட்டிருந்தால் தன்னிலிருந்து மாறுபட்டிருப்பினும் புது முடிபிற்காக மார்க்சைப் போற்றத்தான் செய்திருப்பார். கதை அல்லது நாடகத்தில் இடையிலே வருகிற நிகழ்ச்சிகளைக் கொண்டா முடிபு உருவாகிறது. பெரிதும் வழியைவிட முடிபினைக் கண்டுதானே போற்றுகிறது உலகம். பெற்ற பிள்ளையைக் கொல்கிறார்களே பாவி! இது அடுக்குமா? என்பதற்குப் பதிலாக, பெற்ற தாயாக இருந்தும் பிள்ளையைக் கொன்று படைக்கும் பதிவிரதையாக்கியதுதானே சிறுத்தொண்டர்கதை. அது போற்றப்படுகிறது. அதுபோலவே பல்லாயிரம் மக்கள் நாளும் மடியும் கொடுமை, ஓராயிரவரால் தீருமேல் வள்ளு

வர் உள்ளம் உடன்படாவிட்டாலும், மார்க்சு உள்ளம் உடன்பட்டு செய், எனறே சொல்லுகிறது. அன்பற்ற கன்நெஞ்சர் என்று யாரும் மார்க்சைக் கூற முடியாது. முத்திதரும் பக்தித்துறை நுழைந்த நல்லவர்களான திருமங்கைவார் செய்தது திருட்டு. சீராளனைச் செய்தது கொலை. இது எவ்வாறு தன்னலமற்ற தொழிலோ அது போலவேதான், கொண்ட கொள்கைக்காக இடர்வருமேல் தாங்கி எதையும் செய்யலாம் என்ற முடிவுக்கு வந்துவிடு கிறார்கள். நாட்டின் நல்வாழ்வுக்குத் தன்னலத்தையும் இழந்து முயல்வது உண்மையானால், அவர்களை மட்டும் நாம் எப்படி குற்றவாளி என்று கருத முடியும்? ஆயினும் இவர்கள் சட்ட முறைப்படி குற்றவாளிகள் ஆகவேண்டி யிருக்குமாதாலே அம்முறைக்குச் செல்லாமலிருப்பது நல்லதுதான். சார் காலத்திய கொடுமை, அட்டூழியம், முறையற்ற நீதி இவை, இன்று தளர்வுற்று விளங்கு கிறது. இன்று செல்வரும் அரசும் பல்வேறு போர்வை களில் மறைந்துதான் தன் கொடிய கரங்களை நீட்ட முடி கிறதே தவிர மார்க்சு காலம் போல, நேரடியாக நிற்கும் கொடுமை மறைந்திருக்கிறது—மேலும் அரசே செல்வத் தில் கைவைத்து, பண உருவாக உள்ளவர்களைப் பண்பு உருவானவர்கள் ஆக்கும் செயலைச் செய்கிறது. உலக அரங்கில் மக்கள் மன்னர்களை வீழ்ச்சி அடையச் செய்த எழுச்சியும், நம் நாட்டில் தனியரசுகள் ஜமீன்கள் மறைய எடுத்த நடவடிக்கைகளையும் யாரும் மறந்துவிட முடியாது. ஆலையரசுகளின் செல்வம் மக்கள் சொத்தாவது இயலாத தல்ல. பொது உடைமையால் பூத்து விளங்கும் நாடுகள், மக்கள் உள்ளத்தை ஒளியாக்குவது கண்கூடு. பொது உடைமையர்பால் இன்று 90 கோடி மக்கள் உள்ளனர். செய் திங்கள் முதல் பல கருவிகளும் உள்ளன. ஆதலின் வலியறிதல், இடனறிதல், காலமறிதல் முதலியவைகளை உணர்ந்து முள் மரத்தின் முள்ளை உதிர்க்கப் புது மருந்து காணவும், நஞ்சை மருந்தாக்கவும் செய்யலாம். புதுமை நோக்கி புரட்சியாளர் செய்த கொலைகள் பல; அழித்தவை யும் உண்டு. எனவே எதிர்காலம் கொலையற்ற புரட்சியை, அழிவற்ற மலர்ச்சியை உண்டாக்கவே முயல வேண்டும். அம் மலர்ச்சிக்கும், வாழ்வின் பல்வேறு திருப்பங்களுக்கும் துணையாவது குறள். அம் மலர்ச்சியை எண்ணித்தான் வாழும் வகைக்கு ஏற்றவாறு வள்ளுவர் பொன்னுரைகளை வகுத்துள்ளார்.

வள்ளுவர் வாழ்க்கையும்—நீதியும் இணைந்து செல்ல வேண்டியதை நன்கு உணர்ந்தவர். வாழ்வில் செயல்படு மளவு எண்ணியும் சொல்லியுள்ளார். மதங்களும்கூட பல நல்லுரைகளைத்தான் கற்பித்தன. அவ்வுரையை நம்பாத வர்களல்ல; நம்பியவர்கள்கூட எந்த அளவு இந்த ஆசை களைத் துறந்தார்கள்? பெண்கள் பலரை மணக்கக் கூடாது—விலைமாதர் வழக்கம் சமுதாயத்தில் இருக்கக் கூடாது என்பவைகூட சட்டத்தால் தடுக்கப்பட்டபின் தானே மத நம்பிக்கை யுடையவர்களிடமும், இன்று மறை யத் தொடங்கியுள்ளது.

இதுபோன்ற தடுப்புமுறை பொருள் துறையின் கண் இனி வரத்தான் போகிறது. செல்வரின் பே யெண் ணமும் ஏழையின் பேயெண்ணமும் மோதும்போது இரு வரும் மனிதர்கள் தாம் என்பதை மறந்துவிடுகிறார்கள்.

பல நாட்களாகச் செல்வரிடமே இந்தப் பேயெண் ணம் இருந்தது. ஏழை ஏமாளியாக, நல்லவனாக, சுரண் டப் படுபவனாக இருந்தான். இன்று ஏமாளியிலிருந்து மட்டுமல்ல, நல்லவனிலிருந்து கூட மாற வேண்டிய நிலையைப் பொருள் உண்டாக்கி விட்டது. அரசும் நல்ல வர்கள் பலராக இருக்கும்வரைதான் அனைவரையும் ஆள அடக்கமுடியுமேத் தவிர, பொல்லாதவர்களாகப் பலரும் மாறும்போது செயலற்றுவிடும்; அல்லது பொல்லாத வர்கள் கைக்கு மாறியே தீரும். ஆதலின் இனி யேனும் பொருள் துறையில் ஏழையர் பலரைப் பெருக விட்டு, இல்லாமையால் பலரின் தீய எண்ணங்களை வளர விட்டு வாழ்தல் நல்லதா? அல்லது உலகம் வாழ நாமும் வாழ வேண்டும் என்று எண்ணிச் செயல் செய்யத் துணி வது நல்லதா என முடிவுசெய்யுங்கள். உங்கள் முடிவு போராட்டங்களுக்குமுன் ஏற்பட்டால் வள்ளுவர் காட்டிய நெறி வென்றது, போராட்டத்தின் பின் வென்றால் மார்க்சு காட்டிய மணிமொழி வென்றது.

ஆனல்,பொருளியலில் பொது உடமை பெற்று தமிழ் மக்கள் தழைக்கப் போவது உறுதி! அந்நாள் எந்நாள்? அந்த நாள் வள்ளுவர், மார்க்சு இருவர் எண்ணிய குறிக் கோளும் நிறைவேறும் திருநாள். உலக மண்ணில் பொருளால் ஏற்பட்ட விலங்கு தெறித்தோடும் விடுதலைத் திருநாள். வாழ்க, வருக அந்நாள்!

———